# LUXOR SUPER OFFER



# FREE!

## LUXOR COLOUR FUN BOOKS




*Buy*

**ANY OF THESE 4 DISNEY PEN SETS AND GET AN EXCITING LUXOR COLOUR FUN BOOK FREE!**



ENTER THE MAGIC WORLD OF LUXOR COLOUR. ENTER THE WORLD OF EXCITEMENT.

**Luxor®**

*Everyday, India writes the Luxor way.*

**Luxor Pen Company,** 5631, First Floor, Qutab Road, New Delhi-110055, Tel: 514885, Cable: HITECPEN.

CLARION D 4286

# GET OFF TO A FLYING START *with*



LION
## PREMIER® HB PENCILS

Supersmooth for effortless writing. Micronized lead for unbreakable points. Grace the desks of executives and others with style.

LPP LTD • PREMIER • 261 • HB •

LION
## *PINKY*® PENCILS

Perfect classmates. Pretty & Practical.. Colourful designs, strongly bonded lead for unbreakable points, give it an edge over the competition.








LION *Gee-flo*® BALLPENS
035 carbine 050 carborite

**Tungsten carbide tips.**
Made with Swiss technology.
Unbeatable points. Sharp. Smooth. Non-smudging. Race across the page. Choice of red, black and blue refills. Mini-marvels at a marvellous price.






**LION PENCILS LTD.** 95, Parijat, Marine Drive, Bombay 400 002.

National-728

# Don't you owe the













Tonight
Tomorr

## little one a cuddles?













*The*

**CHANDAMAMA**

*Collection of Soft Toys*

CHANDAMAMA TOYTRONIX



# அம்புலிமாமா

ஏப்ரல் 1992



## பொருளடக்கம்






தனிப்பிரதி ரூ. 4-00.
வருட சந்தா ரூ. 48-00.




# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர்: நாகி ரெட்டி

## அறிவைப் பகிர்ந்து கொள்வோம்!

உங்களில் பலர் தேர்வுகளை எழுதி விடுமுறை நாட்களை இன்பகரமாய்க் கழிக்க எண்ணிக் கொண்டிருப்பீர்கள். கல்வி நம் வாழ்வில் எத்தகைய பங்கு கொண்டது என்பது பற்றி இந்நிலையில் சிந்திக்க வேண்டும்.

நாம் நம்மைச் சுற்றி நிகழ்வனவற்றைப் பற்றி கவலைப் படவில்லை என்பது இதன் பொருளல்ல. நாம் அவற்றைக் கண்டபின் விரைவில் அவற்றிற்கேற்ப செயல்படுகிறோமா என்பதே கேள்வி. நாம் நீண்ட உறக்கத்தில் ஆழ்ந்து அதன் விளைவுகள் ஏற்பட்ட பிறகுதான் விழித்து கொள்கிறோமா?

நம்மை சுற்றிலும் இன்னல்கள் ஏற்படுவது கண்டும் பேசாமல் இருந்து விடுகிறோம். நாம் அடையும் கல்வி பாடத் திட்டங்களுக்கும் அப்பாற்பட்டதாக இருக்க வேண்டும். பிறரது இன்னல்களைப் போக்க உதவ வேண்டும். இளம் வயதில் நாம் கற்கும் கல்வி நம் சமுதாயத்தைப் பேணி அதிலுள்ள கெடுதல்களைப் போக்க வேண்டும்.

இந்தப் பல கெடுதல்களையும் குறைகளையும் போக்க ஒரே வழி நாம் கற்ற கல்வியைப் பிறருடன் பகிர்ந்து கொள்வதுதான். அதனால் நமக்குப் புதிய அனுபவங்களும் இன்பமும் ஏற்படும். இவ்விதம் செய்வதால் நாம் எதையும் இழக்கவும் மாட்டோம். நாம் பிறருக்கு நாம் கற்ற கல்வியைப் பகிர்ந்து கொள்வதன் வாயிலாக புதிய அனுபவங்களைப் பெற்று நம்மையும் உயர்த்திக் கொள்ளச் செயல்படுவோமாக.

மதிமுகம்: 90 ஏப்ரல் 1992 புன்னகை: 4

தனிப்பிரதி: ரூ. 4-00 வருட சந்தா: ரூ. 48-00



# மங்கை

ஏப்ரல் 92

சமையற் கலை இதழ்

☆ இவர்கள் சந்தித்தால்?
(வாசுகி அம்மையார் - மங்கை கற்பகம்)
[பரிசு பெற்ற கட்டுரை]

☆ கவிக்குயில் சரோஜினி தேவி

☆ புத்தாண்டுக் கவிதைகள்

☆ வாழ்வது ஒரு கலை (தொடர் கட்டுரை)

மற்றும் வழக்கமான பகுதிகளுடன்

விலை ரூ. 6/-




# இன்னொரு காமன்வெல்த்

சென்ற ஆண்டு டிசம்பர் மாதம் முதல் மூன்று வாரங்களில் செய்தித்தாள்களில் எல்லாம் 'சோவியத் யூனியன் கலைந்தது', 'யு. எஸ். எஸ். ஆர் மறைந்தது' என்ற தலைப்புகளையே கண்டிருப்பீர்கள். அப்போது சோவியத் யூனியனில் ஏற்பட்ட மின்னல் வேக மாற்றங்களையே அவை அறிவித்தன. உலக நாடுகள் எல்லாமே மாபெரும் நாடாக விளங்கிய சோவியத் யூனியன் இப்படித் திடீரெனக் கலைந்து போனது கண்டு வியப்படைந்தன. அடுத்து என்ன நடக்கப் போகிறது என்பதை எல்லோரும் ஆவலுடன் எதிர்பார்க்கலானார்கள். இப்போது அந்த சோவியத் யூனியன் பல சுதந்திர நாடுகளாக விடுபட்டுப்போய் அவை சுதந்திர நாடுகளின் காமன்வெல்த் (சி. ஐ. எஸ்) என்ற பெயரில் பொது அமைப்பில் சேர்ந்துள்ளன.

இதற்கு முன் காமன்வெல்த் என்றால் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திலிருந்து வேறாகி விடுதலை பெற்ற இந்தியா, பாகிஸ்தான், ஸ்ரீலங்கா, சிங்கப்பூர், ஆஸ்திரே

லியா, கனடா, இங்கிலாந்து போன்ற ஆங்கில ஆட்சியின் கீழ் இருந்த நாடுகளின் ஒரு பொது அமைப்பையே குறிக்கும். இதில் நாற்பதிற்கும் மேற்பட்ட நாடுகள் இடம் பெற்றுள்ளன.

இப்போது உருவாகியுள்ள இன்னொரு காமன்வெல்த்தில் சோவியத் யூனியனிலிருந்து பிரிந்து விடுதலையைப் பிரகடனம் செய்த பனிரெண்டு நாடுகள் உள்ளன. இவற்றிற்கு முன் பால்டிக் நாடுகள் எனப்படும் லாட்வியா, லிதுவேனியா, எஸ்தோனியா என்பவை சோவியத் யூனியனிலிருந்து பிரிந்து சுதந்திர நாடுகள் எனத் தம்மைப் பிரகடனப் படுத்திக் கொண்டு விட்டன.

ரஷ்யாவில் *1917* அக்டோபரில் நடந்த மாபெரும் புரட்சியில் ஜார் மன்னனின் ஆட்சி அகன்றது. மக்களாட்சியில் சோவியத் குடியரசுக் கூட்டு நாடுகள் (யு. எஸ். எஸ். ஆர்) என்ற பெயரோடு புதிய நாடு அமைந்தது. தொழிலாள வர்க்கத்தின் ஆட்சியைத் தாம் ஏற்படுத்துவதாகக் கூறி கம்யூனிஸ்ட் கட்சி துவக்கியது. சென்ற ஆண்டில் பால்டிக் நாடுகள் தனித்துப் போனபின் ரஷ்ய அதிபராக இருந்த கோர்ப்பசேவ் மற்றும் பனிரெண்டு நாடுகளின் சம்மதத்தை பெற்ற ஒரு உடன்படிக்கையை ஏற்படுத்தினார். ஆனால் அவற்றில் பல நாடுகள் சுதந்திரமாகவே இருக்கலாயின. அவற்றை ஒன்றுபட்டு இருக்க கோர்ப்பசேவ் செய்த முயற்சி பயனளிக்கவில்லை.

கோர்ப்பசேவ் பதவி விலகவே ரஷ்யன் பெடரேஷன் அதிபரான போரிஸ் எல்ஸ்டின் முழு அதிகாரங்களை ஏற்றார். மீதமுள்ள பனிரெண்டு நாடுகள் சி. ஐ. எஸ் என்ற அமைப்பில் காமன்வெல்த் நாடுகளாயின. ஆயினும் இந்த காமன்வெல்த் சரிவர செயல்படுமா என்பது ஐயப்பாடாகவே உள்ளது. ஏனெனில் இந்நாடுகள் அனுசரிக்கும் பொருளாதாரக் கொள்கை, நாணய முறை, பாதுகாப்பு ஆகியவை பற்றி இன்னமும் முடிவு எடுத்தபாடில்லை.

*1917* ரஷ்யாப் புரட்சி வரலாற்றில் முக்கிய இடம் பெற்றது. ஆனால் இப்போது ரஷ்யாவில் ஏற்பட்டுள்ள மாறுதல்கள் உலகை எப்படி பாதிக்கப் போகிறது என எல்லோரும் ஆவலுடன் பார்க்கிறார்கள்.



# அவளோ தாயார்!

**ப**னையூரில் வாழும் பரமசிவத்திற்கும் சிவகாமிக்கும் கந்தன் ஒரே மகன். சிவகாமியின் தங்கை தனம் ஒரு பெண் குழந்தையைப் பெற்றதும் இறந்து போனதால் சிவகாமி அக்குழந்தையைத் தன் வீட்டிற்கு எடுத்து வந்து வளர்க்கலானாள். பரமசிவமும் அக்குழந்தையைத் தன் சொந்த மகளாகவே கருதி வந்தான்.

அக்குழந்தைக்குக் காமாட்சி எனப் பெயரிட்டார்கள். அவள் வளர்ந்து பெரியவள் ஆனாள். அவளை வளர்ப்பதில் அவ்வப்போது பரமசிவத்திற்கும் சிவகாமிக்கும் சிறு சிறு மோதல்கள் ஏற்படலாயின. தாயில்லாத பெண் என்ற காரணத்தால் சிவகாமி காமாட்சி போன போக்கிற்கு வளைந்து கொடுக்கலானாள். இதனால் காமாட்சிக்கு கர்வமும் பிடிவாதமும் நாளுக்கு நாள் அதிகரித்தது. இப்படி அவள் போக்கில் போக விடுவது சரியல்ல என்று பரமசிவம் தன் மனைவியை அவ்வப்போது எச்சரித்தான்.

ஆனால் சிவகாமியோ அதைப் பொருட்படுத்தாமல் "இவள் உங்கள் மகள் இல்லை. என் தங்கையின் மகள் என்று தானே இப்படிக் கரித்துக் கொட்டுகிறீர்கள். தாயில்லாக் குழந்தையே என்று தான் இரக்கப்பட்டு வளர்க்கிறேன்" என்று பொரிந்து தள்ளினாள்.

பரமசிவம் எப்படியோ போகட்டும் என்று விட்டு விட்டான். காமாட்சியும் வளர்ந்து மணப்பருவத்தை அடைந்தாள். பரமசிவம் அவளுக்கு ஏற்ற வரனைத் தேடலானான். ஆனால் அவன் கொண்டு வந்த சம்பந்தத்தை எல்லாம் சிவகாமியும் காமாட்சியும் ஏதாவது ஒரு குறையைச் சொல்லி நிராகரித்துக் கொண்டே வந்தார்கள்.

—பாபநாசம் சாமா—



முடிவில் அதே ஊரில் அடுத்த தெருவில் உள்ள சுந்தரம் என்ற இளைஞனுக்கும் காமாட்சிக்கும் விவாகம் என்று தீர்மானமாயிற்று. பெண் பார்க்க சுந்தரமும் அவனது பெற்றோர்களும் வந்த போது காமாட்சி அடக்க ஒடுக்கமாகவே நடந்து கொண்டாள்!

அப்போது பரமசிவம் சிவகாமியிடம் "காமாட்சியின் திருமணத்தோடு நம்மகன் கந்தனுக்கும் கல்யாணம் செய்து விடலாமே" என்றான். அதற்கு இப்போது என்ன அவசரம் என்று சிவகாமி கூறவே பரமசிவமும் "என் நண்பன் நாராயணன் தன் மகளை நம் கந்தனுக்குக் கொடுப்பதாகக் கூறுகிறான். நீயும் அந்தக் குடும்பத்தை நன்கு அறிவாய். நல்ல சம்மந்தம் கிடைக்கும் போது செய்து விடலாமே என்று தான் பார்க்கிறேன்" என்றான்.

சிவகாமியும் "நாராயணனின் தங்கை மகன் இருக்கிறானே. முறைப் பையனுக்கு ஏன் அவன் கட்டிக் கொடுக்கவில்லை? அந்தப் பெண் வாயாடி. அதனால் தான் நாராயணனின் மகளை ஏற்க அவன் தங்கை மறுத்து விட்டாள். அந்த வாயாடியை நம் தலையில் கட்டப் பார்க்கிறானோ உங்கள் அருமை நண்பன்?" என்று கேட்டாள்.

அதை எல்லாம் கேட்டுக் கொண்டிருந்த கந்தன் "என்னம்மா கோமதியைப் பற்றி இப்படிச் சொல்கிறாய்! எவ்வளவு நல்லவள். சிறு குழந்தையிலிருந்தே அவளை உனக்குத் தெரியுமே" என்றான்.

சிவகாமி தன் மகனைக் கோபத்தோடு பார்க்கவே கந்தன் அமைதியாக "நீ கோமதியைப் பற்றி நினைப்பது தவறு. நேற்று வரை அவள் அத்தை அவளையே தன் மருமகள் என்று கூறிக் கொண்டிருந்தாள். கோமதியின் தந்தை அவள் கேட்ட வரதட்சணை சீர் எல்லாம் தன் சக்திக்கு அப்பாற்பட்டது என்றதால் அவள் வேறு பணக்கார இடமாகப் பார்த்துக் கொண்டு விட்டாள். கோமதியும் தன் தந்தையிடம் அந்த சம்மந்தம் வேண்டாம் என்றும் கூறி விட்டாள். இதுதான் விஷயம்" என்றான்.

சிவகாமியும் "ஓ! கோமதியே வேண்டாம் என்றாளோ? அவள் எப்படி அதைச் சொல்லலாம்" எனவே பரமசிவமும் கந்தனும் "அவள் சொன்னது சரிதானே. நாராயணன் எப்பாடுபட்டாவது கோமதியை அவளது அத்தை மகனுக்கே கட்டி வைத்தாலும் அத்தைக்காரிக்கு அவள் வேண்டாத மருமகளாகத் தானே இருக்க முடியும்?" என்றார்கள்.

சிவகாமியும் "ஓ! அப்பாவும் மகனும் சேர்ந்து தாளம் போடுகிறீர்களா? எனக்கென்ன வந்தது? தாராளமாக கோமதியையே கல்யாணம் செய்து கொள்ளட்டும் இவன்? நான் குறுக்கே நிற்கவில்லை" என்று கூறி விட்டுப் போய் விட்டாள்.

கடைசியில் காமாட்சியின் கல்யாணத்தோடு கந்தன் விரும்பிய படியே கோமதியின் கல்யாணமும் நடந்தது. காமாட்சி அவள் கணவன் வீட்டிற்குப் போனதும் கோமதியும் கந்தனின் வீட்டிற்கு வந்தாள். சிவகாமி வேண்டா வெறுப்பாக ஏற்றுக் கொண்ட மருமகள்தானே கோமதி! அதனால் அவள் கோமதியைப் படாதபாடு படுத்தி வந்தாள். கோமதியோ சற்றும் முகம் சுளிக்காமல் எல்லாவற்றையும் சகித்துக் கொண்டு சிரித்த முகத்தோடு இருப்பது கண்டு சிவகாமி திகைத்துத் தான் போனாள்!

சில நாட்களுக்குப்பின் கந்தனும் கோமதியும், காமாட்சி எப்படிக் குடித்தனம் செய்கிறாள் என்று பார்த்து வருவதாக சிவகாமியிடம் சொல்லி விட்டு சென்றார்கள்.





பொறுத்துப் பார்த்தோம். இவளது திமிரான பேச்சும் கர்வமும் அடங்க வில்லை. இன்று இவள் ஏதோ கோபம் கொண்டு கைக்குக் கிடைத்த பாத்திரத்தை எடுத்து என்மீது விட்டெறிந்தாள். நான் சட்டென விலகினேன். ஆனால் அந்தப் பாத் திரம் எங்களைப் பார்க்க வந்த கோமதியின் தலையில் பட்டு காயப் படுத்தி விட்டது" என்றான்.

சிவகாமி என்ன என்று கேட்பது போலக் காமாட்சியைப் பார்த்தாள். காமாட்சியோ, ஓவென அழுத வாறே ஓடிப்போய் சிவகாமியைக் கட்டிக் கொண்டாள். ஆனால் எப் போதும் போலக் காமாட்சிக்குப் பரிந்து பேச சிவகாமியால் முடிய வில்லை. அப்போது சுந்தரம் "சரி சரி வா, போகலாம்" எனக்கூறிக் காமாட்சியைப் பிடித்து இழுத்துக் கொண்டு சென்றான்.

சிவகாமிக்கு என்ன செய்வது என்று தெரியவில்லை. மனதைத் தேற்றிக் கொள்ள அவள் கோவிலுக் குச் சென்றாள். அங்கு மண்டபத் தில் இராமாயணச் சொற்பொழிவு நடந்து கொண்டிருந்தது. சொற் பொழிவு ஆற்றியவர் காட்டிற்குச் சென்ற இராமரையும் சீதா தேவி யையும் பற்றி அன்னை கௌசல்யா தேவிபட்ட மனவேதனையை வர் ணித்துக் கொண்டிருந்தார்.

பெண்கள் இயல்பாகவே இரக்க குணம் கொண்டவர்கள். இப்படிப்

ஆனால் அவர்கள் சென்ற சில நிமி டங்களுக்குள்ளாகவே திரும்பியும் வந்து விட்டார்கள் அவர்களோடு சுந்தரமும் காமாட்சியும் வந்தார் கள். கோமதியின் தலையில் ஒரு கட்டு கட்டப்பட்டிருந்தது.

பரமசிவம் மனம்பதறி "கோமதி! இதென்ன தலையில் கட்டு?" என்று கேட்டான் அப்போது சுந்தரம் "அந்தக் கேள்வியை நீங்கள் உங் கள் அருமை மகள் காமாட்சியிடம் கேட்டிருக்க வேண்டும். இவள் பெண்ணா? பிசாசு. பேய். இவளை இப்படி இந்த சிவகாமி அம்மாள் வளர்த்து விட்டிருக்கிறாள். இவள் எங்கள் வீட்டில் அடி எடுத்து வைத்த நாளிலிருந்து கூச்சலும் ரகளையும் தான். நாங்களும் எவ்வளவோ

பட்டவர்கள் இருமுகங்கள் கொள் வதை நாம் காண்கிறோம். இவள் தாயாக இருக்கும் போது பொறு மையும் பாசமும் கொண்டிருக்கி றாள். ஆனால் அவளே மாமியா ராகும் போது நேர்மாறாக நடந்து கொள்கிறாள். தன் மகள் எவ்வ ளவு கெட்டவளானாலும் அவளைத் தாய் அன்புடன் வளர்க்கிறாள். ஆனால் அதே தாய் மாமியார் என்று ஆனதும் தன் மருமகள் எவ் வளவு நல்லவளாக இருந்தாலும் அவளிடம் ஏதாவது குற்றம் குறை யைக் கண்டு கொண்டே இருப் பாள். தன் மகளையும் தன் மருமக ளையும் ஒன்று போலப் பார்ப்ப வளே உண்மையான தாய். இப்படி நடக்காத பெண்ணைத் தாயென்று சொல்லவே முடியாது.

இதைக் கேட்ட சிவகாமியின் மனதில் ஒருவகையான மாற்றம் ஏற்பட்டது. இவள் வீட்டிற்கு வந் ததும் பரமசிவம் "இன்று கதை கேட் கப் போனாயா? நானும் போயிருந் தேன். அவர் உண்மையான தாய் எப்படிப்பட்டவள் எனக் கூறிய தைக் கேட்டாயா?" என்றான்.

சிவகாமியும் "கேட்டேன். இவ் வளவு நாட்களாக அஞ்ஞான இரு ளில் இருந்து விட்டேன். இன்று தான் வெளிச்சத்திற்கு வந்தேன். கோமதியைப் போல ஒரு மருமகள் கிடைக்க நான் புண்ணியம் செய்தி ருக்க வேண்டும். தாயில்லாக் குழந்தை என்று கூறி காமாட்சிக்கு அளவுக்கு மீறிய செல்லம் கொடுத்து வளர்த்து விட்டேன். ஒவ்வொரு மருமகளும் தன் தாயின் வீட்டை விட்டுத் தன் கணவன் வீட்டிற்கு வந்து அதே தாய்ப் பாசத்தைத் தானே எதிர்பார்க்கிறாள். இனிமேல் எனக்கு கோமதி வேறு, காமாட்சி வேறு என்ற எண்ணமே வராது. இருவரும் எனக்குச் சமமே" என்றாள்.

தன் மனைவியிடம் ஏற்பட்ட மாறுதலைக் கண்ட பரமசிவம் மகிழ்ந்து போனான்.



# அவசரப்படாதே!

வைத்தியர் குப்புசாமி பெயர் பெற்றவர். அவரிடம் வைத்தியம் கற்க ராமகிருஷ்ணன் என்பவன் இருந்தான். அவன் குப்புசாமி கையாளும் முறைகளைப் பார்த்தும் அவற்றைக் குறிப்பு எடுத்துக் கொண்டும் வரலானான். ஒரு முறை அவர் ராமகிருஷ்ணனிடம் "சில வியாதிகளுக்கு மருந்தே கிடையாது. விக்கல் எடுத்தால் கன்னத்தில் பலமாக ஒரு தட்டு தட்டினால் தொடர்ந்து விக்கல் வருவது நின்றுவிடும்" என்றார்.

அப்போது ஒரு குதிரை வண்டி வைத்தியரின் வீட்டு வாசலில் வந்து நின்றது. அதிலிருந்து பருமனான ஒருவர் இறங்கி வந்து வைத்தியரிடம் "ஐயா! விக்கல் எடுத்துக் கொண்டே இருக்கிறது. நிற்கவே இல்லை. ஏதாவது மருந்து..." என்று கூறிக்கொண்டிருக்கும்போதே ராமகிருஷ்ணன் அந்த ஆசாமியின் கன்னத்தில் ஒரு தட்டு தட்டி "இனிமேல் விக்கல் வராது நின்றுவிடும்" என்றான்.

அப்போது அந்தப் பேர்வழி தன் கன்னத்தைத் தடவிக் கொண்டே "ஐயா! விக்கல் எடுப்பது எனக்கு அல்ல. வண்டியிலுள்ள என் அண்ணனுக்கு" என்றார். அப்போது குப்புசாமி ராமகிருஷ்ணனைப் பார்த்தார்.

ராமகிருஷ்ணனும் தலைகுனிந்தவாறே "ஆமாம் வைத்தியம் செய்யும்போது அவசரப்படக்கூடாதுதான்" என்று கூறி நின்றான்!






## 13

*[ருத்திரபுரி இளவரசியின் நவரத்தின மாலையிலுள்ள சந்திரகாந்தக் கல்லை அபகரித்துக் கொண்டு அவளை மந்திரக் கிழவியிடம் ஒப்படைக்கவும் மந்திர வாதியும் முதலமைச்சனும் திட்டம் போட்டார்கள். அதை மறைந்திருந்து கேட்ட விநோதன் அச்செய்தியை எப்படி மன்னனுக்குத் தெரிவிப்பது என யோசிக்க லானான். அப்போது—]*

விநோதனுக்குச் சட்டென சுகு மாரனின் நினைவு வந்தது. அவனை மன்னனிடம் அனுப்பி எச்சரிப் பது என எண்ணி அவன் போய் சுகு மாரனைக் கண்டான். விநோதனைக் கண்ட சுகுமாரனைக் மிகவும் மகிழ்ந் தான். விநோதன் கூறியவற்றை எல் லாம் கேட்டுக் கொண்டு அதனை மன்னனுக்குத் தெரிவிக்க அவன் தலைநகருக்குச் சென்றான்.

அது மை இருட்டான இரவு. மந் திரவாதி வீரவிகடன் முதலமைச்ச னின் வீட்டிற்குப் போய்க் கதவைத் தட்டினான். கதவைத் திறந்த முதலமைச்சன் தன் எதிரே மந்திர வாதி நிற்பது கண்டு "என்ன விஷ யம்? இந்த நடுராத்திரியில் இங்கு வரும்படி அப்படி என்ன நடந்து விட்டது?" என்று கேட்டான்.

மந்திரவாதியும் "ஆமாம் தலை



போகிற அவசரம்தான். நம் திட்டம் இன்னும் யாரோ ஒருவருக்குத் தெரிந்துவிட்டதாக மந்திரக்கிழவி கூறுகிறாள். அவள் அப்படிச் சொன்னால் அது உண்மையாகத்தான் இருக்கும். நான் யாரிடமும் சொல்லவில்லை. நீ யாரிடமாவது சொன்னாயா?'' என்று கேட்டான்.

முதலமைச்சனும் இல்லை என்று கூறவே வீரவிகடனும் ''சரி இனி எச்சரிக்கையாக இருக்க வேண்டும். மன்னனை எச்சரிக்க யாராவது வருவான். எனவே மன்னனைச்சுற்றி நம் ஆட்களை வைக்க வேண்டும், புதிதாக யார் வந்து மன்னனைக் காண வேண்டும் என்று சொன்னாலும் அவனை அனுமதிக்கக் கூடாது என்றான்.

முதலமைச்சனும் அரண்மனையைச் சுற்றிக் காவலைக் கடுமையாக்கினான். மன்னனை யாரும் கண்டு பேச முடியாதபடியும் கட்டுப்பாடுகளை இரகசியமாக செய்தான். இதனால் சுகுமாரன் தலைநகருக்கு வந்ததும் மன்னனைக் காணமுடியவில்லை.

இளவரசியின் பிறந்த நாள் வர இன்னும் ஒருநாளே இருந்தது. அந்த விழாவிற்கான ஏற்பாடுகள் மும்மரமாக நடந்து கொண்டிருந்தன. விநோதனோ சுகுமாரனின் முயற்சி பலிக்காது போனதால் வேறு எவ்வகையில் மன்னனுக்கு மந்திரவாதியும் முதலமைச்சனும் சேர்ந்து நடத்தப் போகும் சதியைத் தெரிவிப்பது என்று யோசிக்கலானான்.

மன்னன் தினமும் மாலையில் தன் அரண்மனையின் மேல் தளத்தில் நின்று சூரியன் மறையும் அழகிய காட்சியைக் கண்டு மகிழ்வான். எனவே அச்சமயத்தில் ஏதாவது ஒரு பறவையின் வாயிலாக ஒரு ஓலைத் துண்டில் நடக்கப் போகும் சதி பற்றி மன்னனுக்கு அறிவிக்கலாம் என்று சுகுமாரன் யோசனை கூறினான். விநோதனும் ஒரு பனை ஓலையில் இளவரசியைக் கவர்ந்து செல்ல வீரவிகடனும் முதலமைச்சனும் சதி செய்கிறார்கள் என்றும் இளவரசியைத் தனியே கோவிலில் கர்ப்பக கிருகத்தினுள் போகவிட வேண்டாம் என்றும் எழுதினான்.

பிறகு ஒரு கழுகை அவன் அழைத்து அந்த ஓலையை மாலையில் அரண் மனை மேல் தளத்தில் நிற்கும் மன்னனிடம் சேர்த்துவிடும்படிக் கூறினான்.

கழுகும் அந்த ஓலையைத் தன் அலகில் கொத்தி எடுத்துக் கொண்டு பறந்து சென்றது. அதைக் கண்ட ஒரு வீரன் அம்பை எய்து அதனை அடித்து வீழ்த்தினான். கழுகு இறந் தது. அது கொண்டு சென்ற ஓலை கோட்டை அகழியில் தண்ணீரில் விழுந்து எங்கோ போய்விட்டது. இதை விநோதன் அறியவில்லை.

மறுநாள் மன்னனும் இளவரசி யும் எவ்வித ஏற்பாடும் செய்யாம லும் எப்போதும் போலச் சிரித்து மகிழ்வதையும் கண்டு விநோதனுக்கு தன் ஓலை ஒரு வேளை மன்னனி டம் போய்ச் சேரவில்லையோ என்ற சந்தேகம் ஏற்பட்டது. அவன் அதைச் சுகுமாரனிடம் சொல்லி அவன் இளவரசி கோவிலுக்குப் போகும் போதாவது மன்னனை எச்சரிக்கும்படிக் கூறினான்.

இளவரசி அம்மன் கோவிலுக் குப் போகிறாள் என்று கேட்டதும் ஒரு பெரிய கூட்டமே அவளைத் தொடர்ந்து சென்றது. சுகுமாரன் அந்தக் கூட்டத்தில் கலந்து மன் னனை அணுகலானான். இளவரசி கோவில் வாசலை அடைந்தபோது அவளை எதிர்கொண்டு அழைத்துச் செல்ல பூசாரி போல வேடம்



பூண்டியிருந்த வீரவிகடனும் அவ னது இரு சீடர்களும் வந்தார்கள். அவர்கள் இளவரசியை அழைத்துச் செல்லலாயினர். அப்போதுதான் சுகுமாரனால் மன்னன் அருகே போக முடிந்தது.

இளவரசி மட்டுமே அம்மனின் கர்ப்பக்கிருகத்தில் விக்கிரகத்தைச் சுற்றி வந்தால் அவள் நீண்டநாள் வாழ்வாள் எனக்கூறி அவளோடு தன்னையும் தன் சீடர்களையும் தவிர வேறு யாரும் வரக்கூடாது என்று வீரவிகடன் தடுத்து விட் டான். மன்னனும் இளவரசியைப் போகவிட்டு அவளை விரைவில் திரும்பி வந்து விடும்படிக் கூறி அங்கேயே நின்றான்.

கோவிலில் மணி ஓசையும் வாத்



யாக இப்போது போய்க் கொண்டிருக்கிறான். சுரங்கப்பாதையின் முடிவில் மந்திரக் கிழவி ஒருத்தி அவர்களுக்காகக் காத்துக் கொண்டிருக்கிறாள்'' என்றான்.

உடனே மன்னன் ஆலயத்துள் ஓடினான். இளவரசியின் தோழிகளும் ஓடித் தேடி அவள் காணப்படவில்லை என்று கூறினார்கள். அப்போது சுகுமாரன் "அதோ அந்த இருவரையும் பிடியுங்கள்- தப்பி ஓடப் பார்க்கிறார்கள். அவர்கள் மந்திரவாதி வீரவிகடனின் சீடர்கள்'' என்றான். அரசாங்க வீரர்களும் தப்பி ஓட முயன்ற அந்த இருவரையும் பிடித்து விட்டார்கள்.

தியஇசையும் பலமாக கேட்டது. பூசாரி இளவரசியை அம்மனின் கர்ப்பக்கிருகத்திற்குள் அழைத்துச் சென்றான். அங்கு சுரங்கப் பாதை வாசலுள் அவளைத் தள்ளித் தானும் உள்ளே போய் விட்டான்.

அப்போது சுகுமாரன் மன்னனிடம் "அரசே! இளவரசியைக் கடத்திக் கொண்டு போகிறார்கள்!'' என்றான். அதைக் கேட்ட மன்னன் திடுக்கிட்டு சுகுமாரனைப் பார்த்தான் சுகுமாரனும் "அரசே! நான்தான் சுகுமாரன். நான் சொல்வதை நம்புங்கள். இளவரசியை ஒரு மந்திரவாதி இப்போது கடத்திக் கொண்டு போய்க் கொண்டிருக்கிறான். அம்மன் விக்கிரகத்திற்குப் பின் உள்ள சுரங்கப்பாதை வழி

அப்போது சுகுமாரன் "அரசே! நாம் சுரங்கப்பாதை முடியும் இடத்திற்குச் சற்றும் தாமதியாமல் போக வேண்டும்'' என்றான். உடனே மன்னனும் சுகுமாரனும் குதிரைகளில் அமர்ந்து கொண்டு வேக வேகமாகச் சென்றார்கள்.

அவர்கள் சுரங்கப்பாதை முடியும் இடத்தை அடைந்ததும் சுகுமாரன் "அதோ பாருங்கள் மந்திரக் கிழவியை. அவள் தப்பி ஓடிவிடாமல் பிடித்துக் கட்டுங்கள். அவள் இளவரசியைத் தன் இருப்பிடத்திற்கு இழுத்துச் செல்லத் திட்டமிட்டு இங்கே நின்று கொண்டிருக்கிறாள். அவளுக்கு அந்த மந்திரவாதி வீரவிகடன் உடந்தை'' என்றான்.

அரசாங்க வீரர்கள் அவளைச்

சூழ்ந்து கொண்டு. "ஏய் கிழவி? மரத்தின் மீதா இருக்கிறாய்! மரியாதையாகக் கீழே இறங்கி வந்து விடு" என்று கூவினார்கள். மந்திரக் கிழவியும் "யாரடா அது என்னை மிரட்டுவது? இந்த உலகத்திலுள்ள யாராலும் என்னை ஒன்றும் செய்ய முடியாது தெரியுமா" என்று கொக்கரித்தாள்.

அப்போது கம்பீரமான ஒரு குரல் "ஏய் மோசக்காரக் கிழவியே! சும்மா அலட்டிக் கொள்ளாதே. நீ அப்படியே இருக்கும் இடத்திலேயே இரு. நகர்ந்து தப்ப முயன்றால் எரிந்து சாம்பலாகி விடுவாய்" என்றது. எல்லோரும் அந்தக் குரல் வந்த திக்கைப் பார்த்தார்கள். அங்கே ஒரு முனிவர் நின்று கொண்டிருந்தார்.

அவர் வேறு யாரும் இல்லை. சதானந்த முனிவர்தாம். சுகுமாரன் அவரைக் கண்டதும் ஓடிப்போய் அவரது கால்களில் விழுந்து "சற்று முன்தான் தங்களை நினைத்தேன். எந்த ஆபத்து நேர்ந்தாலும் தங்களை நினைத்தாலே போதும், தாங்கள் அதனைப் போக்க அந்த இடத்திற்கே வந்து விடுவீர்கள் என்று விநோதன் என்னிடம் கூறி இருந்தான்" என்றான்.

அதைக்கேட்டு சதானந்தரும் புன்னகை புரிந்தவாறே "ஆமாம். நீ சொன்னது உண்மையே. தியானத்தில் இருக்கும்போது விநோதன் கூப்பிடும் குரலைக் கேட்டேன்.



அந்த மரத்தில் உட்கார்ந்திருப்பவள் சாதாரணக் கிழவி அல்ல. மந்திரக் கிழவி. தான் நல்லதொரு இளம் பெண்ணின் இளமையை அடைய வேண்டும் என்பதற்காக பல இளம் பெண்களைக் கவர்ந்து வந்து அவர்கள் சரிப்பட்டு வராததால் அவர்களை எல்லாம் கொன்ற மகா பாதகி" என்றான்.

அதைக் கேட்டு எல்லோரும் வெறுப்புடன் அவளைப் பார்த்தார்கள். அப்போது சதானந்தர் "இவளுக்கு உதவியாக இருப்பவன் ஒரு மந்திரவாதி. அவன் இளவரசியின் நவரத்தின மாலையிலுள்ள சந்திரகாந்தக் கல்லுக்கு ஆசைப்பட்டு இளவரசியைக் கவர்ந்து கொண்டு வந்தான். மாலை அவனுக்



காம்! இளவரசி இவளுக்காம்! இதுதான் அவர்களுக்கு இடையில் ஏற்பட்ட ஒப்பந்தம். ஆனால் மந்திர வாதியால் அரசகுமாரியை இங்கு கொண்டு வர முடியவில்லை. ஏனெனில் விநோதன் பூமிக்குள் குடைந்து இந்த சுரங்கப் பாதையை அடைந்து மந்திரவாதியை மடக்கி விட்டான். இதற்குள் நான் இந்த இருவரது மந்திர சக்திகளைப் போக் கடித்து விட்டேன். இனி இவர் களால் ஒன்றும் செய்ய முடியாது" என்றார்.

அதைக் கேட்ட மன்னன் திடுக் கிட்டான். அவன் சதானந்தரை வணங்கி "மகாத்மா! என் மகள் எங்கே இருக்கிறாள்? அவளுக்கு எவ் வித ஆபத்தும் இல்லையே" என்று கேட்டான். அப்போது சுகுமாரன் "விநோதன் எங்கே போனான்? அவன் தென்படவில்லையே" என்று கேட்டான்.

சதானந்தரும் "கவலைப்படாதே அவன் க்ஷேமமாகவே இருக்கிறான். மந்திரக் கிழவி சுரங்கப்பாதையில் வந்து கொண்டிருந்த வீரவிகடனி டம் அவன் போட்ட திட்டம் முறிந்து போனதைக் கூறி எச்சரித்தாள். வீரவிகடன் தன்னைக் காத்துக் கொள்ள இளவரசியைக் கேடயம் போல உபயோகித்துக் கொள்ளத் தீர்மானித்தான். அவள் அணிந்தி ருந்த நவரத்தின மாலையைக் கழற்ற முயன்றான். ஆனால் அவ னது முயற்சியை நிறைவேற விடாமல் பூமியைத் துளைத்துக் கொண்டு சென்ற விநோதன் வீரவிகடனைத் தாக்கி அவனைப் பிடித்துக் கட்டிப் போட்டான். அவன் இளவரசியை பத்திரமாக அழைத்துக் கொண்டு இன்னும் சற்று நேரத்தில் இங்கு வந்து சேர்வான்" என்றார்.

அடுத்த சில விநாடிகளில் சற்று தூரத்தில் ஏதோ சத்தம் கேட்கவே எல்லோரும் அத்திசையில் பார்த் தார்கள். ஆம் விநோதன்தான் வீர விகடனைப் பிடித்துத் தள்ளிக் கொண்டு வந்து கொண்டிருந்தான். வீரவிகடனும் மிரளமிரள விழித்த வாறே வந்து கொண்டிருந்தான். அவர்களுக்குப் பின்னால் இளவரசி யும் வந்து கொண்டிருந்தாள்.

அவள் தன் தந்தையைக் கண்டதும் ஓடிப்போய் அவனருகே நின்று "அப்பா! நான் வந்து விட்டேன்" என்றாள். வீரவிகடனை விநோதன் சேனாதிபதியிடம் ஒப்படைத்து விட்டு அவன் சதானந்தரின் கால்களில் விழுந்து வணங்கினான்.

அவரும் அவனை எழுப்பி "விநோதா! இனிமேல் நீ சாதாரண மனிதன் போல வாழ வேண்டிய வேளை வந்துவிட்டது. இதுவரை உன்னிடம் இருந்த அபூர்வ சக்திகள் இனி உன்னிடம் இராது" என்றார்.

அப்போது இளவரசி தன் தந்தையிடம் "என்னை அந்த மந்திரவாதியிடமிருந்து காப்பாற்றியவர் இந்த இளைஞர்தாம்." என்றாள். மன்னனும் "அப்படியா! இவர் செய்த உதவியை நான் என்றென்றும் மறக்க மாட்டேன்" என்றார்.

அப்போது சதானந்தர் "சரி! இளவரசியை விடுவித்தாயிற்று. வீரவிகடனையும் பிடித்தாயிற்று. மந்திரக் கிழவியின் மாயசக்திகளை எல்லாம் போக்கி ஆயிற்று. இனி நான் திரும்பிப் போகவேண்டியது தான்" என்றார். மந்திரக் கிழவியோ "என் எல்லா சக்திகளும் போய்விட்டன என்பது தவறு. என் ஒரு சக்தி மீதம் உள்ளது. அது இதுதான்" எனக் கூறினாள் மறுநிமிடம் அவள் எரிந்து சாம்பலாகிவிட்டாள். சதானந்தரும் "ஒழிந்து போயிற்று ஒரு துஷ்ட சக்தி" என்றார்.

அப்போது விநோதன் அவரிடம் "சுவாமி! நானும் தங்களோடு வருகிறேன்" என்றான். ஆனால்



சதானந்தரோ "உன்னை இதற்கா சாதாரண மனிதன்போல் ஆகும் படிச் செய்தேன்? இதுவரை நீ யார் கண்ணிலும் படாமல் எல்லோருக்கும் நன்மை புரிந்து வந்தாய். இனி அந்த சக்தி மறைந்துவிடும். ஆனால் நீ வீரனாய் துணிச்சலுடன் எதையும் செய்பவனாய் இருந்து எல்லோருக்கும் உதவி புரிந்து நீண்டகாலம் வாழ்வாய்" என்றார்.

விநோதன் "அது எப்படி முடியும்?" எனக் கேட்கவே சதானந்தரும் "எல்லாம் முடியும்.நீயே பார்" என்றார். அப்போது மன்னன் "இன்று முதல் எனது நாடு உன்னுடையதே. முனிவரின் சம்மதமும் கிடைத்தால் இதனை உறுதிப்படுத்த இன்னும் ஒன்றையும் செய்வேன். நீ விரும்பினால் என் மகளையும் மணக்கலாம். அதனால் உனக்கு லாவண்யபுரியையும் ஆளும் அரச பதவி கிடைக்கும்" என்றான்.

விநோதன் இளவரசியைப் பார்த்தான். அவள் வெட்கப்பட்டுத் தலை குனிந்து நின்றாள். சதானந்தர் அவளை அழைத்து விநோதனின் பக்கம் நிறுத்தி "நீங்கள் இருவரும் மணம் செய்து கொண்டு மக்களுக்குச் சிறந்த முறையில் தொண்டாற்றி நெடுங்காலம் சுகமாக வாழ்வீர்களாக!" என்று வாழ்த்தி விட்டு அங்கிருந்து கிளம்பிச் சென்றார்.

மன்னன் அந்த முடிவை ஏற்று அவரை மரியாதையுடன் வணங்கி வழி அனுப்பினான். வீரவிகடனும் அவனது கூட்டாளியான முதலமைச்சனும் சிறையில் தள்ளப்பட்டனர்.

இளவரசிக்கும் விநோதனுக்கும் சிறப்பான முறையில் திருமணம் நடைபெற்றது. மன்னன் விநோதனை ருத்திரபுரியின் மன்னனாக்கினான். விநோதன் சுகுமாரனைத் தன் அமைச்சனாக ஆக்கிக்கொண்டு நீண்டகாலம் மக்கள் சுகமாக வாழும் விதத்தில் ஆட்சி புரிந்து வந்தான்.

(முற்றிற்று)






# பாவச் சுமை

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன மீண்டும் மரத்தின் மீது ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அவன் அதைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து "மன்னனே! நீ ஏதோ புண்ணியம் சம்பாதிக்கவா இந்த முயற்சியில் இறங்கி இருக்கிறாய்? சில சமயம் ஒருவன் புண்ணியம் என நினைப்பது பாவமாக மாறி விடுவதும் உண்டு இதனை எடுத்துக்காட்ட மகேந்திர வர்மன் என்ற மன்னனின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்" என்று கூறிக் கதையை ஆரம்பித்தது.

மாயபுரியை மகேந்திரவர்மன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். அவன் மக்களின் நலன்களை அக்கறையுடன் கவனித்து வந்ததோடு



கவிஞர்களையும் பண்டிதர்களையும் பாராட்டி ஆதரித்து வந்தான்.

ஒருமுறை அவனைக் காண சிவஞானம் என்ற பண்டிதர் வந்தார். மன்னனும் தர்பாரில் அவரை வரவேற்று மரியாதை செய்தான். சிவஞானமும் தன் புலமையை தர்பாரில் வெளிக்காட்டவே மன்னனும் மகிழ்ந்து போய் தான் அணிந்திருந்த விலையுயர்ந்த நவரத்தின மாலையைக் கழற்றி அவருக்குப் பரிசாக அளித்தான்.

சிவஞானமும் அந்த மாலையைப் பெற்றுக் கொண்டு யாவரிடமும் விடைபெற்றுக் கொண்டு காசிக்குச் திரும்பிச் செல்லலானார். ஆனால் நடுவழியில் அவரை ஒரு கொள்ளைக்காரன் மடக்கி அவரைக் கொன்றுவிட்டு அவரிடம் இருந்த நவரத்தின மாலையை எடுத்துக் கொண்டு ஓடினான். ஆனால் அவன் அரசாங்கக் காவல் வீரர்களிடம் அகப்பட்டு மன்னன் முன் கொண்டு செல்லப்பட்டான்.

சிவஞானத்தைக் கொன்ற அந்தக் கொள்ளைக்காரனுக்கு அவன் மரண தண்டனை விதித்தான். ஆனால் சிவஞானம் இறக்கத் தான் அவருக்குப் பரிசாக அளித்த நவரத்தின மாலைதான் காரணமாக இருந்தது என நினைத்து இதுதான் செய்த பெரும் பாவம் என்றும் எண்ணி அவன் தவிக்க லானான். அவன் மன வியாதியால் அவஸ்தைப் பட்டதால் அதனை எந்த வைத்தியத்தாலும் போக்க முடியவில்லை.

ஒருநாள் அவனைக் காண யோகானந்தர் என்ற மகான் வந்தார். அவரிடம் ராணியும் மந்திரியும் மன்னனது நிலையைக் கூறி அவனது கவலையைப் போக்குமாறு வேண்டினார்கள். யோகானந்தரும் மன்னன் படுத்திருக்கும் அறைக்குள் சென்றார். மன்னனின் நிலை கண்டு இரக்கப்பட்ட அவர் அவனது படுக்கையில் அவனருகே உட்கார்ந்து கொண்டு "அப்பனே! க்ஷத்திரியனான நீ இப்படி மனம் உடைந்து போகலாமா? ஒருவன் இறந்ததற்காக இப்படிக் கவலைப் பட்டால் போரில் பல்லாயிரம்

பேர்கள் இறப்பதற்காக எப்படி பதை பதைப்பாயோ? அந்த கவி ஞன் இறந்தது ஒரு கொள்ளைக் காரனின் பணத்தாசையால்தான். அதற்காக நீ பொறுப்பு ஏற்று இப்படி வேதனைப்படுவது முறை யல்ல. நீ குற்றம் செய்த அந்தக் கொள்ளைக்காரனைத்தான் தண் டித்து விட்டாயே. அத்துடன் உன் கடமை முடிந்து விட்டது. நீ ஏன் வீணாக இப்போது மனதை அலட் டிக் கொள்கிறாய்?'' என்றார்.

மன்னனும் "மகாத்மாவே! நான் என்னதான் முயன்றும் என் மன தைத் தேற்றிக்கொள்ள முடிய வில்லையே. நான் ஏதோ பாவம் செய்து விட்டவன் போலத்தான் நினைக்கிறேன்'' என்றான். அப் போது யோகானந்தர் "அப்படி யானால் நான் இப்போது சிவ ஞானம் உயிர் பெற்று வரும்படி என் சக்தியால் செய்தால் உன் மனம் நிம்மதியை அடையுமா?'' என்று கேட்டார்.

இதைக் கேட்டு மகேந்திரவர்ம னின் முகம் மகிழ்ச்சியால் மலர்ந் தது. ஆனால் மறு நிமிடமே அவ னது முகம் வாட்டமுற்றது. அவன் யோகானந்தரை வணங்கி "ஐயா! சிவஞானத்தோடு கொள்ளைக் காரனையும் உயிர்பெற்று வரச் செய்ய முடியுமா?'' என்று கேட் டான். யோகானந்தரோ "இரு வரும் உயிர் பெற்று வரச்செய்யும்



சக்தி எனக்கு இல்லை. என் சக்தி முழுவதையும் உபயோகித்து ஒரு வரை மட்டுமே உயிர் பெற்றுவரச் செய்ய முடியும்'' என்றார்.

அப்போது மன்னன் "அப்படி யானால் சிவஞானத்தை உயிர் பெற்று வரச் செய்ய வேண்டாம். மேலும் மேலும் நான் பாவச் சுமையைச் சுமக்க விரும்பவில்லை'' என்று கூறினான்.

வேதாளம் இந்தக் கதையைக் கூறி "மன்னனே! மகேந்திரவர்மன் கூறியது விசித்திரமாகத் தானே இருக்கிறது! யோகானந்தர் சிவ ஞானத்தை உயிர்பெற்று வரச் செய்வதாகக் கூறியும் ஏன் அவன் அதனை ஏற்கவில்லை? சிவஞானம் உயிர் பெற்று வந்தால் அவன்

மனம் நிம்மதி அடையலாமே. இத்தகைய அரிய வாய்ப்பை மன்னன் நழுவ விட்டுவிட்டானே. சிவஞானத்தோடு கொள்ளைக்காரனையும் உயிர்பித்து வரச் செய்ய வேண்டும் என மன்னன் யோகியிடம் கேட்டது முற்றிலும் பொருளற்றதுதானே? சிவஞானத்தை மட்டும் உயிர்பெற்று வரச் செய்வதால் மேலும் தன் பாவம் அதிகரிக்கும் என மன்னன் நினைத்தது சரியா? இக்கேள்விகளுக்கு விடை தெரிந்திருந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்குநூறாகி விடும்'' என்றது.

விக்கிரமனும் ''மகேந்திரவர்மன் கூறியதில் ஆச்சரியப்படத்தக்க விஷயம் எதுவும் இல்லை. மன்னன் நியாயத்தைச் சீர்த்தூக்கிப் பார்த்தும் மனதில் வாதம் புரிந்தும் அத்தகைய முடிவிற்கு வந்தான். யோகி சிவஞானத்தை மட்டும் உயிர் பெற்று வரச் செய்தால் மன்னன் தான் கொள்ளைக்காரனைத் தண்டித்தது அநீதியாகி விடும் என எண்ணினான். அதனால் தனக்கு வந்து சேரும் பாவத்தோடு யோகியின் மாபெரும் தவவலிமையையும் அபகரித்த பாவம் வேறு தன்னைச் சாரும் என அவன் நினைத்தான். அதனால்தான் இருவரையுமே உயிர்ப்பிக்கும்படி அவன் யோகியிடம் கேட்டுப் பார்த்தான். ஆனால் அவர் தன் சக்தி முழுவதும் கொண்டு சிவஞானத்தை மட்டுமே உயிர்பெற்று வரச் செய்ய முடியும் எனக் கூறியதால் அதனால் பயனில்லை எனக் கருதியே மன்னன் சிவஞானத்தை உயிர் பெற்று வரச் செய்ய வேண்டாம் எனக் கூறினான். இது முற்றிலும் சரியே'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலைந்து போகவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.





# அழகா? குணமா?

பள்ளத்தூரில் பெரியசாமி என்ற வியாபாரி இருந்தான். அவனது பள்ளித் தோழன் சின்னசாமி கோட்டையூரில் வியாபாரம் செய்து வந்தான். இருவரும் வெவ்வேறு ஊர்களில் இருந்தாலும் அவர்களது நட்பு குறையவில்லை. இருவரும் நன்கு வியாபாரம் செய்து லட்சாதிபதிகளாகி விட்டார்கள்.

பெரியசாமியின் மகன் மாணிக்கம். சின்னசாமியின் மகள் மரகதம். இருவரும் திருமண வயதை அடைந்து விட்டார்கள். அதனால் பெரியசாமியும் சின்னசாமியும் அவர்களுக்குத திருமணம் செய்து வைக்கத் தீர்மானித்தனர். மரகதமும் மாணிக்கத்தை மணக்க விரும்பினாள். அவள் குணத்தில் தங்கக் கம்பி. கொஞ்சம் நிறம் மட்டும் இல்லை. மாநிறம்தான்.

மாணிக்கமோ மரகதத்தை மணக்க விரும்பவில்லை. ஏனெனில் அவன் பார்வையில் அவள் அழகற்றவள். அவன் தான் மணக்கப் போகும் பெண் மிகமிக அழகாக இருக்க வேண்டும் என்று தன் தந்தையிடம் கூறி மரகதத்தை தன் மனைவியாக ஏற்க முடியாது என்று கூறிவிட்டான்.

பெரியசாமி தன் மகனின் பிடிவாதத்தைச் சின்னசாமியிடம் கூறி வருத்தப்பட்டான்.

அப்போது மரகதம் அவர்கள் இருவரிடமும் "நீங்கள் வருத்தப் படாதீர்கள். எனக்கு மட்டும் நீங்கள் இருவரும் அனுமதி அளித்தால் அவர் மனதை மாற்றி என்னையே மணந்து கொள்ளும்படிச் செய்கிறேன்" என்றாள். அவர்களும் அதற்குச் சம்மதித்தார்கள்.

மாணிக்கம் தன் தந்தையிடம் "நான் மிகமிக அழகான பெண்

—சிவனார் செல்வன்—



அழகைத் தேடிப் போகிறாய். நான் நலல குரல் உள்ள பெண்ணாகத் தேடினேன். அழகைப் பற்றிக் கவலைப்படவில்லை. அப்படி ஒரு பெண்ணும் கிடைத்தாள். ஆனால் எல்லாம் பேசி முடிக்கும் போது அந்தப் பெண்ணின் தொண்டையில் கோளாறு ஏற்பட்டு அவளால் பேசக்கூட முடியாமல் போய் விட்டது. அவளது இனியகுரல் போயே போயிற்று. அதனால் நான் வாழ்க்கையில் வெறுப்புற்று ஊர் ஊராய்ச் சுற்றுகிறேன். நீ அழகிய பெண்ணைத் தேடுகிறாய் என்றதும் எனக்கு ஒரு ஊரின் ஞாபகம் வருகிறது. நீ அங்கே போய்ப் பார்க்கலாம்'' என்றாள்.

எங்கே இருக்கிறாள் என்று தேடிக் கண்டுபிடிக்கிறேன். பிறகு வந்து உங்களிடம் கூறி அவளை மணந்து கொள்வேன்'' என்று கூறிவிட்டுக் கிளம்பினான்.

அவன் கிளம்பிச் சென்ற மறு நாளே மரகதம் ஆண் வேடம் பூண்டு மாணிக்கம் சென்ற வழியிலே வேகமாகச் சென்றாள். அவள் மாணிக்கத்தை ஒரு ஊரில் சந்தித்தாள். மாணிக்கம் அவளை ஆண் என்றே நினைத்து விட்டான். அவளை அவனால் அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லை.

மாணிக்கம் தான் அழகான பெண்ணை தேடிச் செல்வது பற்றிக் கூறினான். மரகதமோ "அடடா! என்னைப் போலத்தானா நீயும்? நீ

மாணிக்கமும் "அப்படியா? அது எந்த ஊர்? நீயும் என்னோடு வருகிறாயா?'' என்று ஆவலுடன் கேட்டான். மரகதமும் "ஆகா! வருகிறேன். அவளைப் பார்த்தால் நீ மயங்கிப் போய்விடுவாய். அவளது தாயார் அவ்வூருக்கு வரும் அயலூர்க்காரரர்களுக்குச் சாப்பாடு போட்டுப் பணம் சம்பாதித்துத் தான் மகளோடு வாழ்ந்து வருகிறாள்'' என்றாள்.

மாணிக்கமோ "அவளது குடும்பம் பற்றிக் கவலை இல்லை. அவர்களது குணமும் தொழிலும் எப்படிப்பட்டதானாலும் பரவாயில்லை. பெண் அழகாக இருந்தால்

போதும்'' என்றான். இருவரும் சென்று குறிப்பிட்ட கிராமத்தை அடைந்து அந்தப் பெண்மணியின் வீட்டை அடைந்தார்கள்.

அப்பெண்மணியும் அவர்களை வரவேற்று சாப்பாடு பரிமாறி னாள். அப்போது மரகதம் "இங்கு வந்தபோது அழகான பெண் ஒருத்தி இருந்தாளே. அவளை வரச்சொல் லுங்கள் பார்க்கலாம்'' என்றாள். அதற்கு அந்தப் பெண்மணியும் "கடந்த ஒரு மாதமாக அவள் யார் முன்னாலும் வருவதில்லை. வேண்டு மானால் அவள் உருவப்படத்தைக் கொண்டுவந்து காட்டுகிறேன்'' என்று கூறிப் பெருமூச்சு விட்ட வாறே உள்ளே போய் ஒரு படத்தை எடுத்து வந்தாள்.

மாணிக்கம் அந்தப் படத்தைப் பார்த்துவிட்டு "ஆகா! என்ன அழகு! மணந்தால் இவளைத் தான் மணக்க வேண்டும். அம்மணீ! என் தந்தை பல லட்சங்களுக்கு அதிபதி. நான் அழகான பெண் ணைத் தேடிக் கண்டுபிடித்து அவளையே மணந்து கொள்வது என்று தீர்மானித்துப் பல ஊர் களுக்கும் சென்றேன். இதுவரை நான் பார்த்த பெண்களில் ஒருத்தி கூட அழகாக இல்லை. இந்தப் படத்தில் உள்ள பெண்தான் மிக வும் அழகாக இருக்கிறாள். அவளை வரச் சொல்லுங்கள். நேரில் பார்த்து விட்டுத் திருமணத்தை நிச்சயிக்க



லாம்'' என்றான்.

அதற்கு அந்தப் பெண்மணி "உலகில் எதுதான் நிலையானது? குறிப்பாகப் பெண்களின் அழகு விரைவில் அழியக்கூடியது. இதற்கு உதாரணம் என் பெண்ணே. நீங் களே பாருங்கள்'' எனக்கூறி உள்ளே போய் தன் மகளை அழைத்து வந் தாள். அவளைக் கண்டு மாணிக் கம் திடுக்கிட்டுப் போனான். ஏனெ னில் படத்தில் இருந்தது போல அவள் அழகாக இருக்கவில்லை. ஒரு கண்ணில் பூ விழுந்து முகம் முழுவதிலும் சிறுசிறு கருப்புப் புள்ளிகள் இருந்தன.

அப்போது அந்தப் பெண்மணி "என் மகள் மூன்று மாதத்திற்கு முன்புவரை மிக அழகாகத்தான்

இருந்தாள். ஆனால் திடீரெனப் பெரியம்மை நோய் கண்டு அவள் இப்படி ஆகிவிட்டாள். உலகில் அழகு நிலைத்து இருப்பது அல்ல. பெண்ணிற்கு அழகுதான் முக்கியம் என்பது இல்லை. குணம்தான் வேண்டும். எல்லோருடனும் நன்கு பழகும் இயல்பு வேண்டும். அதனால் உனக்கு நான் கூறுவது என்னவென்றால் இனியும் நீ அழகான பெண்ணைத் தேடிக்கொண்டிராதே. அப்படி ஒரு பெண்ணைக் கண்டு நீ மணந்து கொண்டாலும் அவளது அழகும் என்றாவது மறையத்தான் மறையும். நிலைத்திராது. அதனால் நீ உனக்கும் உன் குடும்பத்தவருக்கும் நன்கு தெரிந்த நற்குணமுள்ள பெண்ணை மணந்து கொள். சுகப்படலாம். அழகான பெண் என்று ஒருத்தியை மணந்தால் அவள் அழகு அழிந்ததும் உனக்கு வாழ்க்கை மீது வெறுப்பே ஏற்படும். பிறகு வாழ்வில் சுகம் ஏது?'' என்றாள்.

மாணிக்கத்தின் மனதில் அந்தப் பெண்மணி கூறியது நன்கு பதிந்தது. அவன் உடனே மரகதத்திடம் ''நண்பா! நான் என் ஊருக்குப் போய் என் தந்தை தேர்ந்தெடுத்த மரகதத்தையே மணந்து கொள்கிறேன். அவளுக்கு அழகு அவ்வளவாக இல்லை என்றாலும் நல்ல குணம் படைத்தவள்'' என்று கூறி விடை பெற்றுக் கொண்டு சென்றான்.

மரகதமும் தன் ஊருக்குப் போய் தன் தாய்தந்தையரிடம் மாணிக்கத்தின் மனம் மாறிவிட்டது எனக் கூறி நடந்ததை விவரித்தாள். அது கேட்டுச் சின்னசாமியும் மகிழ்ந்து போனான். இதற்குச் சில நாட்களுக்குப் பிறகு பெரியசாமி தன் மனைவியுடனும் மகன் மாணிக்கத்துடனும் முறைப்படிப் பெண் பார்க்கச் சின்னசாமியின் வீட்டிற்கு வந்தான். மாணிக்கத்திற்கும் மரகதத்திற்கும் விவாகம் நிச்சயமாகி விமரிசையாக நடந்தேறியது.



# அம்புலிமாமா அனுபந்தம்—41




## நம் நாட்டுப் பறவைகளும், மிருகங்களும்:

# கருடன்

மிகப்பெரிய உருவம் கொண்ட பறவைகளில் கருடன் முக்கியமானது. பறக்க வசதியான இறக்கைகளுடன் கோதுமை நிறத்தில் மிக கம்பீரமாகத் தென்படும் இது மாமிசம் உண்ணும் உயிரினம். இதன் அலகும் நகங்களும் மிகவும் கூராயும் உறுதியாயும் உள்ளவை. மற்ற பறவைகளைப் போலவே இது ஆகாயத்தில் பறக்க வல்லது. மிக உயரத்தில் பறந்த போதிலும் தரை மீது தனக்கு வேண்டிய இரையைக் கண்டால் குறி தவறாமல் பாய்ந்து அதனைப் பிடித்தும் விடும். உயர்ந்த மலைகளிலும் பாறைகளிலும் இது முட்டை இடும். இதனைப் பக்ஷிராஜன் என்ற பெயரில் பறவைகளின் மன்னன் எனப் பொருள்பட அழைப்பதும் உண்டு.

கருடனுக்கு நம் புராணங்களில் தனிச்சிறப்பிடம் உண்டு. இதனை மகாவிஷ்ணுவின் வாகனமாகக் கருதுகிறுர்கள். வினதாமகன் என கருடனின் பெயரால் கருட புராணமும் ஏற்பட்டது.

கருடன் தன் தாயை அடிமைத்தளையிலிருந்து விடுவிக்க தேவர்களின் அதிபனான தேவேந்திரனிடம் போய் அமிர்தம் கொடுக்குமாறு கேட்டான். இந்திரன் கொடுக்க மறுக்கவே அவனோடு போர் புரிந்து அவனை வென்று அமிர்த கலயத்தை எடுத்து வந்து தன் தாயின் அடிமைத்தனத்தைப் போக்கினான். கருடனின் பராக்கிரமத்தை இந்திரனும் மற்ற தேவர்களும் பாராட்டினார்கள். மகாவிஷ்ணுவும் அவனைத் தன் வாகனமாக ஏற்றுக் கொண்டார்.

புராணங்களில் கருட பட்சிகளாக இருந்த ஜடாயுவும் சம்பாதியும் புகழ் பெற்றவர்களாவர்.

செய்திகளில் சிறுவர்கள்:

# பேபி ஷாமிலி




அண்மையில் நடந்த 'கிலுகன்பெட்டி' என்ற மலையாள மொழிப் படத்தின் படப் பிடிப்பின் போது அதன் இயக்குனர் 'டேக்' என்றதும் காமிரா முன் நின்ற ஐந்து வயதுச் சிறுமி கிளசரின் போன்ற எவ்வகை திரவத் தின் உதவி இல்லாமல் கண்களிலிருந்து கண்ணீர்த் துளிகளைப் பொல பொலவென்று கொட்டி நடித்தாளாம். இயக்குநர் 'கட்' என்று கூறியதும் அச்சிறுமி கண்ணீர் வடிப் பதை 'டக்'கென்று நிறுத்தி விட்டாளாம். பெரிய பெரிய நடிகர்களெல்லாம் கண்ணீர் வடித்து நடிக்க கிளசரினைப் பயன்படுத் தும் போது இச்சிறுமியால் மட்டும் அதைப் பயன்படுத்தாமல் கண்ணீர் வடிக்க முடிந் தது என்றால் அது ஒரு அதிசயம்தானே!

அந்தச்சிறுமி வேறு யாருமில்லை. அண்மையில் 'அஞ்சலி' என்ற தமிழ்ப் படத் தில் திறம்பட நடித்து இவ்வாண்டின் சிறந்த குழந்தை நட்சத்திரப் பரிசை அடைந்த பேபி ஷாமிலிதான். இன்று ஒரு திரைப்படத்தில் நடிக்க ஒரு லட்சம் ரூபாய் வாங்கும் ஒரே குழந்தை நட்சத்திரம் இவள். தற்போது இவள் மலையாளம், தமிழ், தெலுங்கு, மொழி களில் தயாரிக்கப்பட்டு வரும் சுமார் இருபது படங்களில் நடித்துக் கொண்டிருக்கிறாள்.!

ஐந்து வயதான சிறுமியால் ஒரே தடவை யில் எப்படி இருபது திரைப் படங்களில் நடிக்க முடிகிறது என்று ஆச்சரியம்தானே படுகிறீர்கள். இவளது தந்தை திரு. ஏ. எஸ். பாபு முன்னதாகவே திரைப்பட இயக்குனரிட மிருந்து ஷாமிலி நடிக்க வேண்டிய சூழ் நிலை, சம்பவம், பாவம் முதலியவற்றைத் தெரிந்து கொள்கிறார். அவர் வீட்டில் ஷாமி லிக்கு அவற்றை விளக்கி அவள் எப்படி நடிக்க வேண்டும், பேச வேண்டும், முக பாவங்களைக் காட்ட வேண்டும் என்பதை எல்லாம் சொல்லித் தருகிறார். அதனால் மறுநாள் படப்பிடிப்பின்போது அவள் எவ்வித சிரமமும் இல்லாமல் நடித்து விடு கிறாள்.

இவளது தந்தையும் இவளோடு படம் பிடிக்கும் இடங்களுக்குச் செல்கிறார். படப் பிடிப்பு முடியும் வரை அங்கேயே இருந்து விடுகிறார். ஒரு மாதத்தில் சுமார் இருபது நாட்கள் ஷாமிலி படப்பிடிப்பில் கலந்து கொள்கிறாள். மற்ற பத்து நாட்கள் அவள் தான் படிக்கும் பள்ளிக்குச் செல்கிறாள். தன் அண்ணன் ராபர்ட்டுடனும், அக்கா பேபி ஷாலினியுடனும் இவள் மிகவும் விரும்பி விளையாடுகிறாள். இவளது அக்கா ஷாலினி யும் ஒரு குழந்தை நட்சத்திரமே.

இரண்டு வயதாக இருக்கும்போதே திரைப்படங்களில் நடிக்க ஆரம்பித்த பேபி ஷாமிலி தொடர்ந்து நடித்துக் கொண்டே இருக்க வேண்டும் என்பதே அவளது தந்தையின் விருப்பம்.

# உங்களுக்கு தெரியுமா?

1. 'சொர்க்க மந்திரம்' எனப்படுவது எங்கே உள்ளது?
2. உலகிலேயே மிகப் பழைய மிருகக்காட்சி சாலை எங்கே உள்ளது?
3. 1452-ல் பிறந்த இத்தாலி நாட்டைச் சார்ந்தவர் ஓவியராயும், இசை மேதையாயும், கணித சாத்திர வல்லுனராயும் திகழ்ந்தார். அவர் யார்?
4. 'கேர்ள் டேவிள்'ளை முதன் முதலில் எப்போது பிரசுரித்தார்கள்?
5. ஒரு சிறுமியின் கடிதம் கண்டு அமெரிக்க ஜனாதிபதி ஆப்ரகாம் லிங்கன் தாடி வளர்க்க ஆரம்பித்தாராம். அந்தச் சிறுமியார்?
6. வரும் ஒலிம்பிக் விளையாட்டுகள் ஜூலையில் ஸ்பெயின் நாட்டில் நடைபெறும். முதன் முதலில் எப்போது ஒலிம்பாய்ட் நடந்தது? தற்போதைய ஒலிம்பிக் விளையாட்டுப் போட்டிகள் எந்த ஆண்டில் முதன் முதலாக ஆரம்பமாயின?
7. கராத்தே என்பதன் பொருள் என்ன?
8. மெகஸ்தனிஸ் இந்தியா வந்து கண்ட சாம்ராஜ்யம் எது?
9. காந்திஜீ தன் அரசியல் குருவாக யாரைக் கருதினார்?
10. ஜூலியஸ் சீஸரின் பெயரில் 'ஜூலை' மாதப் பெயர் ஏற்பட்டது. அவரது மருமகப்பிள்ளையின் பேரில் எந்த மாதத்தின் பெயர் உள்ளது?
11. அக்பரின் நிதி அமைச்சர் யார்?
12. 'ரகுவம்சம்' என்ற காவியத்தைப் படைத்தவர் யார்?
13. வினாயகரின் வாகனமாய் எலிவர்க்கத்து மூஞ்சூறைக் கூறுகிறார்கள். எலிகளை பக்தி சிரத்தையுடன் வழிபட ஒரு ஆலயம் எங்கு கட்டப்பட்டுள்ளது?
14. நெப்போலியன் முதன் முதலில் எந்தத் தீவிற்கு சிறைப்பட அனுப்பப்பட்டார்?
15. கருடனையும் பாம்மையும் தன் தேசியக்கொடியில் உருவாகக் கொண்ட நாடு எது?

## விடைகள்

1. சீனாவிலுள்ள பெய்ஜிங்.
2. ஆஸ்திரியாவின் வியன்னாவில் 1752-ல் நிறுவப்பட்டது.
3. லியனார்டோ டிவின்சி.
4. 'நியூயார்க் வேர்ல்ட்'ல்-1913 டிசம்பர் 21-ல் ஆர்தர்விக் அதனை உருவகப்படுத்தினார்.
5. கிரேஸ் பிரெடில்.
6. கி.மு. 776. தற்போதைய ஒலிம்பிக் போட்டிகள் கி.பி 1896-ல்.
7. அடி.
8. சந்திரகுப்த மௌரிய சாம்ராஜ்யம்.
9. கோபால கிருஷ்ண கோகலே.
10. அகஸ்டஸ் சீசர்-ஆகஸ்ட்.
11. ராஜா தோடர்மல்.
12. காளிதாஸ்.
13. ராஜஸ்தானில் கார்னியால்.
14. எல்பா.
15. மெக்சிகோ.



## இரண்டு மைல் நீளக் கடிதம்

ஒருவர் சாதாரணமாகத் தம் உறவினர்களுக்கும் நண்பர்களுக்கும் சற்று நீண்ட கடிதங்கள் எழுதுவது உண்டு. ஆனால் நேபாளத்தைச் சேர்ந்த ஸ்ரீராஜேந்திர சந்த் டாகூர் என்பவர் ஒரு அதிசய சாதனையைப் புரிந்திருக்கிறார். இவர் தம் இந்திய நண்பர் ஒருவருக்கு இந்தப் புத்தாண்டின் ஆரம்பத்தில் 10,315 பக்கங்கள் கொண்ட மிக மிக நீளமான கடிதம் ஒன்றை எழுதி அனுப்பி இருக்கிறார். இந்தக் கடிதத்தின் நிறை 42 கிலோ கிராம். 5153 தாள்கள் கொண்ட இக்கடிதம் தாள்களை ஒன்றன் கீழ் ஒன்றாக இடைவெளி விடாது வைத்துக் கொண்டே போனால் இரண்டு மைல் நீளமாகுமாம். ஜனவரியில் அக்கடிதத்தைப் படிக்க ஆரம்பித்த அந்த நண்பர் இன்னமும் அதைப் படித்துக் கொண்டே இருக்கிறாராம், முடித்த பாடில்லையாம்.

# அம்புலிமாமா செய்திகள்

## வாழ்வதற்குப் போராட்டம்

ஆஸ்திரேலியாவின் வடமேற்குப் பகுதியில் ஜனநடமாட்டமே இல்லாத ஒரு பகுதி உள்ளது. இப்பகுதியில் காணாமல் போனத் தம் வீட்டு மிருகங்களைத் தேடிச் சென்ற சிலர் அப்பகுதியில் பாயும் ஒரு நதிக்கரை ஓரத்தில் 35 சைனாக்காரர்களைக் கண்டு வியப்படைந்தார்கள்.

மலைகளும் பாறைகளுமாக உள்ள அப்பகுதியை அவர்கள் அடைந்தவிதமே ஒரு கதையாம். அவர்கள் நம் நாட்டிலிருந்து படகில் புறப்பட்டனராம். அது நடுக்கடலில் கவிழ்ந்து விடவே அவர்கள் பல நாட்கள் நீந்தி அங்கு கரை சேர்ந்தார்களாம். உள் நாட்டில் 200 கிலோ மீட்டர் தூரம் நடந்து சாப்பிட எதுவும் கிடைக்கவில்லையாம் அதனால் கைக்குக் கிடைத்த விஷஜந்துக்களான பாம்புகளை கூட விடாமல் கொன்று தின்றார்கள். நதியில் கிடைத்த மீன்களைப் பிடித்து தின்று தம் பசியைப் போக்கிக் கொண்டார்களாம். எப்படி இருக்கிறது இவர்கள் வாழ்க்கை!





# எதிர்ப்பும் வேண்டும்!

விஜயசேனன் என்ற மன்னனின் முதலமைச்சர் ஞானசாகரர். மன்னன் எந்த விஷயத்திலும் தன் முதலமைச்சர் கூறுவதையே ஏற்று ஆட்சி புரிந்தான். ஞானசாகரரும் எந்தப் பிரச்னைபற்றியும் முடிவு எடுக்கத் தனக்கு யோசனை கூற பத்து அமைச்சர்களை நியமித்திருந்தார்.

இந்தப் பத்து அமைச்சர்களில் நாகேந்திரன் என்பவன் வக்கிர புத்தி கொண்டவன். மற்ற அமைச்சர்கள் சரி எனக் கூறுவதை அவன் தவறு என்றே கூறுவான். அவர்கள் தவறு எனக்கூறுவதை அவன் சரி எனச்சொல்வான். ஞான சாகரரும் எதற்கும் ஒரு எதிர்ப்பு என்று இருந்தாலே அவ்விஷயம் நன்கு அலசப்படும் என்பதற்காக நாகேந்திரனின் உளறல்களை எல்லாம் கேட்டும் சகித்து வந்தார்.

நாகேந்திரன் இப்படி விதண்டா வாதம் செய்வதோடு நில்லாமல் கோள் சொல்லும் இயல்பும் உடையவன். அவன் ஒரு சமயம் மன்னனை கண்டு தான் சொல்வதை யாருமே கேட்பதில்லை என்று புகார் செய்தான். மன்னனும் "எனக்கு முதலமைச்சரிடம் முழு நம்பிக்கை உள்ளது. அவர் பெரும்பான்மையோரின் விருப்பத்தின் படித்தான் முடிவு எடுக்கிறார். உன் கருத்து பெரும்பான்மையரோடு ஒத்துப் போவதில்லை. அதனால் ஏதோ ஒரு குறை உன்னிடம் தான் உள்ளது. அந்தக் குறை என்ன என்று நீயே கண்டு அதைப் போக்கிக்கொள்" என்று கூறினான்.

இதன் பிறகு மன்னன் எல்லா அமைச்சர்களையும் அழைத்து நாகேந்திரன் செய்த புகாரை கூறி

—க. ரா. ரகுபதி—



"உங்களில் ஒவ்வொருவருக்கும் கூட இது போலப் புகார் கூற வேண்டிய நிலை வரலாம். ஆனால் பெரும்பான்மையினரின் கருத்தோடு ஒத்துப்போவதே சரி என்பதை மட்டும் நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். அப்போதுதான் உங்களுக்கு மதிப்பு. நாட்டிற்கும் உயர்வு" எனக்கூறிவிட்டு சென்றான்.

மன்னன் போனதும் மற்ற அமைச்சர்கள் நாகேந்திரனைக் கேலி செய்து "என்னமோ பெரிய சாதனை புரிபவன் போல மன்னனிடம் போய்ப் புகார் செய்தாயே. அவர் சொன்னது உன் மண்டையில் ஏறிற்றா? இனி மேலாவது எல்லோரோடும் ஒத்துப் போகப் பழகிக்கொள்" என்று கூறினார்கள்.

நாகேந்திரனோ "இப்போது கேலி செய்கிறீர்கள். நான் சொல்வதையும் ஒரு நாள் நீங்கள் எல்லோரும் ஏற்கும்படிச் செய்கிறேன். பாருங்கள்" என்று மிடுக்காகக் கூறினான்.

ஒரு முறை விஜயசேனன் வேட்டைக்குப் போய் விட்டுத் திரும்பி வந்தான். நாகேந்திரன் எல்லா அமைச்சர்களையும் அழைத்து "மன்னர் வெற்றிகரமாக வேட்டையாடி வந்திருக்கிறார். அவரை நாம் சிறப்பான முறையில் பாராட்ட வேண்டும்" என்றான். ஆனால் மற்ற அமைச்சர்களோ "இது சாதாரண விஷயம். பெரும் சாதனை அல்ல. ஏதாவது போரில் வெற்றி பெற்றோ அல்லது கொடிய அரக்கனைக் கொன்று விட்டு வந்தார் என்றால் அப்போது பாராட்டுவது பொருத்தமாய் இருக்கும். ஆனால் ஒரு சாதாரண வேட்டைக்காகப் பாராட்டுவது சரியல்ல" என்றார்கள்.

ஆனால் அப்போது ஞானசாகரர் குறுக்கிட்டு "நாகேந்திரன் கூறுவது சரி. நாம் மன்னரைத் தக்க விதமாய்ப் பாராட்டுவோம். அதற்கான ஏற்பாடுகளை நாகேந்திரனே செய்யட்டும்" என்றார். அதைக் கேட்டதும் நாகேந்திரன் மற்ற அமைச்சர்களை ஏளனமாகப்

பார்த்து சிரித்துவிட்டு கர்வத்தோடு தலைநிமிர்ந்து நடந்து சென்றான்.

அவன் போனதும் ஞானசாகரர் "எனக்கும் இந்த அற்ப விஷயத்திற்காக மன்னனைப் பாராட்டுவது சரியல்ல என்றே தோன்றுகிறது. ஆனால் நாம் இதற்கு எதிர்ப்பு தெரிவித்தால் அவன் மன்னனிடம் போய் நாம் அவரைப் பாராட்ட விரும்பவில்லை என்று கோள் சொல்வான். அதனால் மன்னருக்கு நம் மீது வெறுப்பு ஏற்பட்டு நாகேந்திரன் சொல்வதை எல்லாம் நம்பத் தொடங்கிவிடுவார். அது நாட்டிற்கு நல்லது அல்ல. நாம் வேண்டாம் என்பது நியாயமாக இருந்தாலும் அதன் விளைவு என்ன என்பதையும் யோசித்துப் பார்க்க வேண்டும்" என்றார்.

அப்போது அமைச்சர்கள் "இப்படிக் கோள் சொல்பவனை ஏன் அமைச்சனாக வைத்துக் கொண்டிருக்கிறீர்கள். உடனே பதவி நீக்கம் செய்யுங்கள். இவன் கோள் சொல்வானே என்று அப்போது பயப்படவே வேண்டாம்" என்றார்கள்.

ஞானசாகரரும் "உலகில் எதற்கும் எதிர்ப்பு என்பதையாராவது ஒருவன் செய்யத்தான் செய்வான். சில சமயங்களில் அவன் கெட்டிக்காரத்தனமாகப் பிறரையும் மாட்டிவிடுவான். அப்படித்தான் இப்போது நாகேந்திரன் செய்திருக்கிறான். அவனை நாம் நமக்குச் சாதகமாக உபயோகித்துக் கொள்ள வேண்டும். எதிர்ப்பு என்று இருந்தாலே உண்மை வெளிவரும். எனவே இவனை விட்டுப் பிடிக்க வேண்டும். அதனால் தான் இவனது உளறல்களை எல்லாம் சகித்துக் கொள்கிறேன். இவனால் நமக்குப் பயனே" என்றார்.

மற்ற அமைச்சர்கள் ஞானசாகரரின் விளக்கம் கேட்டுத் திருப்தி அடைந்தார்கள்.





# என்ன பேச்சு!

ஒருநாள் மணியன் தன் ஊரிலிருந்து கிளம்பி ஈரோட்டில் நடக்கும் வாரச் சந்தைக்குப் போனான். அங்கே தன் ஊரைச் சேர்ந்த மருதன் குடைகளை வைத்துக் கொண்டு விற்பதைக் கண்டு ஆச்சரியப்பட்டான். ஏனெனில் அவன் குடை வியாபாரம் செய்கிறான் என்பதை அவன் அறிந்திருக்கவில்லை. அதனால் அவன் எப்படி வியாபாரம் செய்கிறான் என்பதைச் சற்று தூரத்தில் இருந்தபடியே கவனிக்கலானான்.

சற்று நேரமானதும் ஒல்லியான ஒருவன் மருதனின் கடைக்கு வந்தான். மருதன் அவனைப் பார்த்து "நீயோ ஒல்லியாக இருக்கிறாய். உனக்கு அதிக கனமில்லாத லேசான குடைதான் தேவை. இதைப் பிடித்துக் கொண்டு நீ பத்துமைல் கூட சிரமம் தோன்றாமல் நடந்து போகலாம்" என்றான். வந்தவனும் குடையைப் பிரித்து நன்கு பார்த்துவிட்டுத் திருப்தி அடைந்தவனாய் அதன் விலையைக் கொடுத்துவிட்டு அதை எடுத்துக் கொண்டு சென்றான்.

இதற்குப் பின் மிகப் பருமனான ஒருவன் குடை வாங்க மருதனின் கடைக்கு வந்தான். மருதன் ஒரு குடையை எடுத்துக் காட்டி "உன் உடம்பு சற்றுப் பெரியது. லேசான குடையைப் பிடித்தால் அதன் பிடி நசுங்கி விடும். அதனால் உனக்குக் கனமானதும் உறுதியானதுமான குடையாகப் பார்த்து எடுத்துக் கொடுத்திருக்கிறேன்" என்றான்.

பருமன் பேர்வழி குடையை வாங்கிப் பார்த்துவிட்டுச் சற்றுத் தயங்கவே, மருதன் "சந்தேகமே வேண்டாம். இந்தக் குடை உறுதியானது. உன் உடம்பில்

—உஷா கிருஷ்ணன்—

வெய்யிலோ மழையோ விழாமல் தடுக்கும் அளவிற்கு அகலமானது'' என்றான். அந்தப் பேர்வழியும் குடையை வாங்கிக் கொண்டு சென்றான்.

அப்போது மணியன் மருதனின் கடைமுன் போய் நின்று "என்ன மருதா! குடை வியாபாரமா செய்கிறாய்?'' என்று கேட்கவே மருதனும் "ஆமாம் வா. உட்கார்'' என்றான். மணியன் சிரித்தவாறே "நீ ஒல்லியானவனிடமும் பருமனானவனிடமும் பேசிக் குடை விற்றதை கேட்டும் பார்த்துக் கொண்டுதான் இருந்தேன். என்னைப் பார். ஒல்லியாகவும் இல்லை. பருமனாகவும் இல்லை. எனக்கு எப்படிப் பட்ட குடை கொடுப்பாய்?'' என்று கேட்டான்.

மருதனும் "உனக்கு ஏற்ற குடையை வெகு எளிதில் எடுத்துக் கொடுக்கலாம். மழை காலத்திற்குக் குடை மிகவும் தேவை. அது இல்லாவிட்டால் உடம்பு நனைந்து உடல் நலன் கெட்டுவிடும். அதனால் உன் வேலை எல்லாம் கெடும். எனவே நீ குடை வாங்க வேண்டியது மிக மிக அவசியம்'' என்று கூறி ஒரு குடையை எடுத்து கொடுத்தான்.

மணியன் அந்தக் குடையை வாங்கி பார்த்துவிட்டு "இது அப்படி ஒன்றும் நன்றாக இல்லையே'' என்றான். மருதனோ "அப்படிச் சொல்லாதே. நீ மட்டும் இதைப் பிடித்துக் கொண்டு நின்றால் உன்னைப் பார்ப்பவர்கள் எல்லாம் யாரோ லட்சாதிபதி நிற்கிறார்



என நினைப்பார்கள். குடையைப் பிரித்து நின்றால் உன்னை ஒரு ஜமீன்தாரர் என்றே கூறுவார்கள். இந்தக் குடையைப் பிடித்துக் கொண்டு நீ ஒரு குதிரை மீது சவாரி செய்தால் உன்னை ஒரு மகா ராஜா என்றே நினைப்பார்கள். தெரிந்ததா?'' என்றான்.

மணியன் குடையை விரித்துப் பார்த்தவாறே ''இந்த அளப்பில் எல்லாம் நான் மயங்கி விட மாட்டேன்'' என்றான். மருதனோ பணிவுடன் ''நான் சொன்னது பொய்யே இல்லை. தாங்கள் மட்டும் இந்தக் குடையைப் பிடித்துக் கொண்டு தெருவில் போய்ப்பாருங்கள். அப்போது உண்மைத் தெரியும்'' என்றான்.

மணியும் சிரித்தவாறே ''என்னப்பா இது! இப்போது என்னைத் தாங்கள் என்று அடைமொழி போடுகிறாயே'' எனக்கேட்கவே மருதனும் ''இந்தக் குடையைத் தாங்கள் கையில் பிடித்ததுமே தங்கள் மதிப்பு உயர்ந்து விட்டது'' என்றான்.

மணியனும் ''நன்றாகத்தான் பேசுகிறாய். நான் இந்தக் குடையை விலைக்கு வாங்கிக் கொள்கிறேன். அதுசரி. ஒரு விஷயம் கேட்கிறேன். நீ பலரகக் குடைகளை வைத்திருக்கிறாயா என்ன? ஒவ்வொருவரிடமும் ஒவ்வொரு விதமாகச் சொல்லி விற்கிறாயே'' என்று கேட்டான்.

மருதனும் ''நீ நம் ஊர்க்காரன். அதனால் சொல்கிறேன். என்னிடம் இருப்பது ஒரே ரகக் குடைகளே. நான் ஆளுக்குத்தக்கபடி அதைப் பற்றிக் கூறி அவன் தலையில் கட்டி விடுவேன். அப்படி அவர்களுக்கு ஏற்றபடி சொன்னால் தானே என் வியாபாரம் நடக்கும்'' என்றான்.

மணியனும் ''அடேயப்பா! நீ தான் சரியான வியாபாரி'' என்று கூறியவாறே குடையைப் பிரித்துப் பிடித்துக் கொண்டு அங்கிருந்து சென்றான்.






# இருமாறான சக்திகள்

அமிர்தலிங்கம் தெய்வபக்தி மிகுந்தவன். தினமும் எழுந்ததும் குளித்துவிட்டுக் கடவுள் பூஜை செய்வான். இரவில் படுக்கப் போகுமுன் கடவுளை தியானித்து விட்டே படுப்பான். ஒரு நாளிரவு கடவுள் அவன் கனவில் தோன்றி "பக்தா! உனக்கு என்ன வரம் வேண்டும்?" என்று கேட்டார்.

அமிர்தலிங்கமும் "பகவானே! என் எதிர்வீட்டிலுள்ள வீரய்யன் பரம நாத்திகன். அவன் மனதில் கடவுள் பக்தி ஏற்படும்படிச் செய்யுங்கள்" என்றான். கடவுளும் "நாளையிலிருந்து நீயே உன் பேச்சால் அவனை ஆஸ்திகனாக்க முயல்வாய். உனக்கு அபூர்வ சக்தி அளிக்கிறேன்" என்று கூறி மறைந்தார்.

அமிர்தலிங்கம் கண்விழித்துக் கொண்டு தான் கண்ட கனவை நினைத்து மகிழ்ந்து போனான். அவன் காலையானதும் வீரப்பனைக் கண்டு "கடவுள் உனக்கு அறிவுரை கூறும்படி என்னிடம் சொன்னார். நீ தினமும் கடவுளைப் பூஜை செய். அப்படிச் செய்யாவிட்டால் உன் வீட்டுக் கொல்லையிலுள்ள தென்னை மரம் எரிந்து சாம்பலாகிவிடும்" என்றான்.

வீரப்பனோ "நடப்பது நடக்கட்டும். ஆனால் நான் கடவுள் பூஜை மட்டும் செய்ய மாட்டேன்" என்றான். சில வினாடிகளே கழிந்தன. வீரப்பனின் மனைவி ஓடி வந்து வீரப்பனிடம் "நம் கொல்லையிலிருந்த தென்னைமரம் எரிந்துவிட்டது" என்று கூறினாள். அமிர்தலிங்கம் கர்வத்தோடு நிமிர்ந்து வீரப்பனைப் பார்த்தான்.

வீரப்பன் அன்றிரவு ஊருக்கு வெளியே இருந்த புளியந்தோப்பிற்குள் போய் "புளிய மரத்துப்

—எஸ். சங்கரராம்—

பிசாசே! நீ முன்பு பல தடவை களில் எனக்கு உதவுவதாகக் கூறி யும் நான் ஏற்கவில்லை. இப்போது உன் உதவி தேவைப்படுகிறது'' என்று கூறிக் காலையில் நடந்த தைக் கூறினான்.

பிசாசும் ''சரி. நீ உன் வீட்டிற் குப் போவதற்குள் அமிர்தலிங்கத் தின் வீடு இடிந்து பாழாகிக் கிடக் கும்'' என்று கூறி அனுப்பியது. வீரப்பன் திரும்பிவந்து அதைக் கண்டு மகிழ்ந்தான். அதனால் ஆத்திரம் கொண்ட அமிர்தலிங்கம் வீரப்பனின் வீடு இடிந்து போகச் செய்தான். இருவரும் தம் வீடு களை இழந்து நடுத்தெருவில் நின் றனர்.

அப்போதுதான் இருவருக்கும் தம் செய்கைகளின் விளைவு என்ன என்று தெரிந்தது. அமிர்தலிங்கம் வீரப்பனிடம் ''நீ என் வீட்டைப் பாழாக்கப் பிசாசின் உதவியை நாடினாய். இதை ஊராரிடம் சொல்லி பிசாசுகளோடு சகவாசம் செய்யும் உன்னை ஊரை விட்டே விரட்டுகிறேன் பார்'' என்றான்.

வீரப்பனோ ''நான் இன்றுதான் பிசாசை உதவிக்குக் கூப்பிட்டேன். நீயோ கடவுளை தினமும் கூப்பிடு கிறாய். எனக்கு பிசாசிற்கும் கடவுளுக்கும் அதிக வித்தியாசம் இருப்பதாகத் தெரியவில்லை. நீதான் கடவுள் பெயரைச் சொல்லி என் தென்னை மரத்தை எரித்தாய். அதனால்தான் பிசாசின் உதவியை நாடினேன்'' என்றான்.

அமிர்தலிங்கமும் ''ஆமாம் யாருக்கும் இதுவரை தீங்கு இழைக் காத நீ நாத்திகனாக இருந்தால் எனக்கென்ன? உன்னை நான் மாற்ற முயன்றதால்தானே இப்படி எல்லாம் நடந்தது'' என்றான். அன்றிரவு கடவுள் வீரப்பனின் வீட்டை முன் போல ஆக்கினார். அவரே பிசாசை மிரட்டி அமிர்தலிங்கத்தின் வீட்டை முன்போல ஆக்கச் சொன்னார். அமிர்தலிங்கமும் வீரப்பனும் நல்ல படிப்பினை கற்றார்கள்.






இராவணன் சீதையைப் பணிய வைக்க அசோக வனத்திற்குச் சென்றான். அங்கு சீதை பயங்கர அரக்கிகளுக்கிடையே அமர்ந்து இராமரையே நினைத்துக் கொண்டிருந்தாள்.

இராவணன் ஏதோ நற்செய்தி கூறுபவன் போல உற்சாகத்துடன் 'ஏ சீதையே! உன் இராமன் போரில் இறந்து விட்டான். இனி நீ என் மனைவியாவதற்கு எந்தத் தடையும் இல்லை. உன்னை என் பட்டத்து ராணியாக்குகிறேன். உன்னை மீட்க இராமன் கடலைத் தாண்டி வந்தான். ஆனால் என் சேனாதிபதி பிரகஸ்தன் தன் வீரர்களோடு போய் இராமனும் வானரர்களும் தம் கூடாரங்களில் தூங்கும் போது பாய்ந்து தாக்கினார்கள். பிரகஸ்தன் இராமனின் தலையை வெட்டினான். விபீஷணனை பிரகஸ்தனின் வீரர்கள் பிடித்து விட்டார்கள். இலட்சுமணனும் வான்ரர்களும் எங்கோ ஓடிவிட்டார்கள். சுக்கிரீவன், அனுமான், ஜாம்பவான், மற்றும் சில வானர வீரர்கள் கொல்லப்பட்டு போர்க்களத்தில் கிடக்கிறார்கள். எங்கே பார்த்தாலும் கொல்லப்பட்ட வானரர்களின் உடல்கள் குவியல் களாக இருக்கின்றன'' என்று கூறினான்.

சீதை எதுவும் பேசாது இருக்கவே இராவணன் ஒரு அரக்கியிடம் ''நீ போய் வித்யுத்ஜிஹ்வனை இராமனின் தலையோடு



நான் இங்கே வரச் சொன்னதாகச் சொல்'' என்றான். சற்று நேரத்தில் வித்யூத்ஜிஹ்வனும் இராமரின் தலையோடும் வில்லோடும் சீதை இருக்கும் இடத்திற்கு வந்தான். இராவணன் அவனிடம் ''நீ இராமனின் தலையை சீதை முன் வை. அவள் தன் கணவன் அடைந்த கதியைப் பார்க்கட்டும்'' என்றான்.

வித்யுத்ஜிஹ்வனும் இராமனின் தலையை சீதை முன் வைத்துவிட்டு வில்லை இராவணனிடமே கொடுத்து விட்டுச் சென்றான். சீதை அந்தத் தலையைப் பார்த்துவிட்டு அது உண்மையிலேயே இராமரின் தலைதான் என்று எண்ணிக் கண்ணீர் வடிக்கலானாள்.

தன்னால்தானே இராமருக்கு இத்தகைய முடிவு ஏற்பட்டது என நினைத்து அவள் துயரக் கடலில் மூழ்கிப் போனாள்.

இராமர் போனபின் தனக்கு வாழ்வு ஏது? இப்படிப்பட்ட ஒரு முடிவிற்காக அவர் இலங்கைக்கு வரவேண்டும்? எனக்காக அவர் காடு மலைகளில் எல்லாம் திரிந்து மாபெரும் கடலையும் கடந்து வந்தாரே. இவ்வளவும் வீணாயிற்றே என எண்ணிக் கண்ணீர் வடித்தாள்.

அவள் இராவணனிடம் ''என்னை இராமரின் உடல் கிடக்கும் இடத்திற்கு அழைத்து போ. நான் அந்த உடலோடு சேர்ந்து எரிந்து சாம்பலாகிறேன்'' என்றாள். இராவணனோ ''வேண்டாம். கவலைப்படாதே. இனிமேல் உனக்கு யாருமே இல்லை. பேசாமல் என்னை ஏற்றுக் கொண்டு சுகமாக இரு'' என்றான்.

அப்போது ஒரு வீரன் ஓடிவந்து இராவணனை வணங்கி ''மகாப்பிரபு! சேனாதிபதி பிரகஸ்தன் தங்கள் வரவை எதிர்பார்த்துக் கொண்டு இருக்கிறார். மற்ற தலைவர்களும் வந்தாகி விட்டது. இராமரையும் அவரது படைகளையும் எப்படித் தடுத்து நிறுத்துவது என்பது பற்றிப் பேசிக் கொண்டிருக்கிறார்கள். தாங்கள் வந்த பின்தான் முடிவு செய்ய வேண்டுமாம்'' என்

றான். இதைக் கேட்ட இராவணன் உடனே அங்கிருந்து சென்றான்.

அப்போது விபீஷணனின் மனைவியான சரமை சீதையிடம் வந்து "இந்தத் தலை இராவணனின் மாயத்தால் உருவானது. உன்னை ஏமாற்ற இவ்வாறு செய்தான். ஆனால் அவனது குட்டு வெளிப்பட்டு விட்டது. உன் எதிரிலேயே இராமரை எப்படித் தாக்க வேண்டும் என முடிவு செய்ய அவன் வரவைப் படைத் தலைவர்கள் எதிர்பார்க்கிறார்கள் என்று ஒருவன் வந்து சொன்னதைக் கேட்டாயே. இவனால் இராமரை ஒன்றும் செய்ய முடியாது. நீ கவலைப் படாதே. இராமர் வெற்றி பெற்று உன்னை மீட்கத்தான் போகிறார்" என்றாள்.

சரமை கூறியது கேட்டுச் சீதை மன ஆறுதல் அடைந்தாள். இராவணன் தன்னை அடைய என்னென்ன மாய வேலைகளை எல்லாம் செய்கிறான் என்று எண்ணி அவள் திகைத்துப் போனாள். ஆனால் சத்தியமும் தர்மமும் எந்நாளும் பொய்க்காது, உண்மை எப்படியும் என்றாவது வெளியாகி விடும் என்பது இராவணன் விஷயத்தில் நிரூபிக்கப்பட்டு விட்டது. இப்படி சீதை நினைக்கையில் அப்போது சரமை "இனிமேல் இராவணன் என்ன செய்யப் போகிறான் என்பதை அறிந்து வருகிறேன். நீ



கவலைப்படாதே. எல்லாம் நல்ல விதமாகவே முடியும்" என்று கூறி விட்டுச் சென்றாள்.

சற்று நேரத்திற்குப் பின் சரமை திரும்பி வந்து "இராவணனிடம் பலர் உன்னை விடுதலை செய்து இராமரோடு சமாதானமாகப் போகும்படிக் கூறினார்கள். அவனது தாயாரும் அவ்வாறு செய்யும்படிச் சொல்லிப் பார்த்தாள். ஆனால் அதைக் கேளாமல் அவன் போர் புரியவே துடிக்கிறான். இதற்கு அவனது சில மந்திரிகளும் ஊக்கம் அளிக்கிறார்கள்" என்றாள்.

அப்போது வானரர்கள் முரசுகளை ஒலிப்பதையும் சங்கநாதம் செய்வதையும் சரமையும் சீதையும் கேட்டார்கள். அதனால் இராமர்



தம் படைகளோடு இலங்கை மாநகரை முற்றுகை இடத் தொடங்கி விட்டார் என்பது அவர்களுக்குத் தெரிந்தது.

வானரப்படைகள் செய்த அமளியைக் கண்ட இராவணன் தன் மந்திரிகளை அழைத்து "நீங்கள் முன்பு அனுமார் கடல் கடந்து வந்ததையும், தற்போது இராமன் வானரப் படைகளோடு வந்திருப்பதையும் கூறினீர்கள். அந்த இராமனது படைபலம் அதிகம் என நீங்கள் எல்லாம் நினைத்துக் கதிகலங்கிப் போயிருப்பது தெரிகிறது. ஏன் இப்படி பயப்படுகிறீர்கள்?" என்று கேட்டான்.

அப்போது மால்யவந்தன் என்ற அமைச்சன் இராவணனிடம் "தங்களுக்கே எதிரியின் பலம் எவ்வளவு என்பது தெரியும். தங்களது ஒற்றர்கள் அது பற்றித் தங்களிடம் விவரமாகக் கூறி இருக்கிறார்கள். எதிரியின் கை நம் கையை விட ஓங்கி உயர்ந்திருக்கிறது என்று அறிந்தபின் நாம் எதிரியுடன் சமாதானமாகப் போவது தான் புத்திசாலித்தனம். இந்தப் போர் மூளக் காரணம் சீதையே. அவளை இராமரிடம் ஒப்படைத்து விட்டால் பிரச்னை தீர்ந்துவிடும்" என்றான்.

இராவணன் "அது மட்டும் முடியாது" என்றான். எனவே மால்யவந்தன் "தாங்கள் அசுரர்களாலோ தேவர்களாலோ தங்களைக் கொல்ல முடியாது என்ற வரம்தான் கேட்டுப் பெற்றீர்கள். மனிதனாலோ குரங்கினாலோ சாகக்கூடாது என்று தாங்கள் வரம் பெறவில்லை என்பதை நினைவில் கொள்ள வேண்டும்" என்று கூறினான்.

அதைக் கேட்ட இராவணன் கோபம் கொண்டு "என்ன உளறுகிறாய்? தேவர்களையும் அசுரர்களையும் வெல்லும் சக்தி கொண்ட நான் இந்த அற்ப மனிதனையும் குரங்குகளையும் வெல்ல முடியாமலா போய் விடுவேன்? ஏதோ எனக்கு நல்லது சொல்பவன் போல நடித்து எனக்கே துரோகம் செய்ய நினைக்கிறாயா? இராமன் யார்? ஒரு அற்ப மனிதன். தந்தை

யால் கைவிடப்பட்டவன். காட்டிலும் மேட்டிலும் திரிபவன். குரங்குகளின் சக்தியை நம்புகிறவன். இப்படிப்பட்டவனா என்னை வெல்லப் போகிறான்? நான் எல்லா அசுரர்களையும் அடக்கி ஆள்பவன். தேவர்கள் என் கால் தூசிக்குச் சமம். என்னையா அவனை விட பலம் குறைந்தவன் என்று கூறுகிறாய்? நான் சீதையைக் கவர்ந்து இங்கே கொண்டு வந்தது இராமனிடம் ஒப்படைப்பதற்காக அல்ல. சாமார்த்தியமும் பலமும் இருந்தால் அந்த இராமன் என்னோடு போர் புரிந்து என்னை வென்று சீதையை மீட்டுப் போகட்டும். நான் ஏன் அவனுக்குப் பயப்பட வேண்டும்?'' என்று உறுமினான்.

இராவணனின் கோபம் கண்டு மால்யவந்தன் எதுவும் பேசாமல் இருந்தான். அவன் சற்று நேரம் கழித்து "தாங்கள் தோற்க வேண்டும் என்று நினைத்து நான் இப்படிக் கூறவில்லை. தங்களது பலம் எல்லோருக்கும் தெரிந்ததே. தாங்கள் வெற்றி பெறுவீர்கள். இதில் சற்று ஐயம் இல்லை'' எனக் கூறினான். அது கேட்டு இராவணன் சினம் தணிந்து மற்ற மந்திரிகளுடன் போர் அமைப்பு பற்றி யோசிக்கலானான்.

இந்திரஜித் இலங்கை மாநகரின் மேற்கு வாசலைப் பாதுகாக்க வேண்டும். வடக்கு வாசலில் சுகனும் சாரணனும் படையுடன் இருப்பார்கள். மத்தியில் விருபாட்சன் இருப்பான். இவ்வாறு திட்டம் வகுத்துக் கொடுத்து விட்டு இராவணன் அந்தப்புரத்திற்குள் சென்றான்.



இராமர் வானரப் பிரமுகர்களுடன் இலங்காபுரியை அடைந்ததும் "தேவர்களாலும் வெல்ல முடியாது எனக் கூறப்படும் இந்த இலங்கை மாநகரை நாம் வெல்வது எப்படி?'' என்று யோசிக்கலானார்.

அப்போது விபீஷணன் "என் ஆட்கள் நால்வர் பறவைகளின் உருவில் பறந்து சென்று இலங்காபுரியைப் பார்த்து வந்தார்கள். கிழக்கு வாசலுக்குக் காவலாக பிரகஸ்தன் இருக்கிறான். தெற்கு வாச



இராமர் இராவணனை எதிர்ப்பார். அவரோடு இலட்சுமணனும் இருப்பான். மத்தியிலுள்ள படையை சுக்கிரீவனும் ஜாம்பவானும் விபீஷணனும் எதிர்ப்பார்கள். போரில் இராமர், இலட்சுமணனை த்விர அனுமார், சுக்கிரீவன், நீலன் அங்கதன் விபீஷணன் ஆகியோர் மட்டுமே மனித உருவில் இருக்க வேண்டும். இப்படித் திட்டம் வகுக்கப் பட்டது.

லில் மகோதரனும் மகாபார்சுவனும் இருக்கிறார்கள். மேற்கு வாசலில் இந்திரஜித்தும் வடக்கு வாசலில் சுகனும் சாரணனும் உள்ளார்கள். விருபாட்சன் நகரில் மத்தியில் இருக்கிறான். இப்படியாக இவர்கள் தலைமைகளில் படைகள் நிறுத்தப்பட்டுள்ளன'' என்றான்.

இராமரும் அதைக் கேட்டுத் தம் படையில் உள்ளவர்கள் யார் யார் யாரை எதிர்க்க வேண்டும் எனக் கூறினார். நளன் கிழக்கு வாசலிலுள்ள பிரகஸ்தனை எதிர்க்க வேண்டும் அங்கதன் தெற்கு வாசலிலுள்ள மகாபார்சுவனையும் மகோதரனையும் எதிர்க்க வேண்டும். அனுமார் மேற்கு வாசலிலுள்ள இந்திரஜித்தை எதிர்க்க வேண்டும்.

இப்படி ஏற்பாடு செய்த பின் இராமர் இலட்சுமணனோடு சுவேல பர்வதத்தின் மீது ஏறிப் பார்த்தார். விபீஷணனும் மற்றவர்களும் அந்த மலை மீது ஏறி அன்றைய இரவுப் பொழுதை அங்கே கழிக்கத் தீர்மானித்தார்கள். அங்கிருந்து அவர்கள் திரிகூட மலே மீது அமைந்திருந்த இலங்கை மாநகரைப் பார்த்தார்கள். அங்கு ராட்சஸ நடமாட்டமும் அவர்களுக்கு நன்கு தெரிந்தது.

மாலையாகியது. கதிரவனும் மறைந்து விட்டான். அன்றிரவுப் பொழுதை அவர்கள் மலை மீதே கழித்து விட்டு மறுநாள் காலை மீண்டும் ஒருமுறை இலங்காபுரியைப் பார்த்தார்கள் இராவணனின் மாளிகையும் அழகிய சோலைகளும் அவர்களுக்குத் தென்பட்டன.

சுக்கிரீவன் இராவணனைப் பார்த்து விட்டான். உடனே ஆகாய வழியே போய் அவன் பக்கம்

சென்று "அடே இராவணா! நான் இராமரின் நண்பன். நான் உன்னை ஒழித்து விடுவேன்" என்றான். அது கேட்டு இராவணன் கோபம் கொண்டு "ஏய் குரங்கே! உன்னை என்ன செய்கிறேன் பார்" என்று அவன் மீது பாய்ந்தான்.

வெகுநேரம் இருவரும் சளைக்காமல் சண்டை போட்டார்கள். நேரம் ஆக ஆக இராவணன் களைத்துப் போனான். அதனால் மாய்ப் போர் புரியலானான். அது கண்டு சுக்கிரீவன் ஆகாயத்தில் வெகு தூரம் போய்விட்டான். அவன் தன்னைத் தாக்க வருவான் என எதிர்பார்த்து இராவணன் காத்துப் பார்த்தான். ஆனால் சுக்கிரீவன் அங்கு வராமல் நேராக இராமர் இருக்கும் இடத்தை அடைந்தான்.

இராமர் சுக்கிரீவனைக் கடிந்து கொண்டு "நீ என்னிடம் சொல்லாமல் ஏன் இராவணனைத் தாக்கப் போனாய்? இந்த மாதிரி மன்னர்கள் திடீரெனச் செயல்படக் கூடாது. உனக்கு ஏதாவது நேர்ந்து விட்டால் என்ன ஆவது? நான் எண்ணிய படி எல்லாம் சரியாக நடக்க வேண்டுமே என்று தான் கவலைப் படுகிறேன்" என்றார்.

சுக்கிரீவனும் "இராவணனைக் கண்டதும் எனக்கு ஆத்திரம் வந்து விட்டது. சீதாதேவியைக் கள்ளத் தனமாக கவர்ந்து சென்ற அந்தக் கயவனை விட்டுவிடக் கூடாது என நினைத்தேன். அதனால்தான் போனேன்" என்றான். எல்லோரும் சுவேல பர்வதத்திலிருந்து இறங்கி வந்தார்கள். இராமர் போர் புரியத் தயாரானார். அவரும் வானரப் பிரமுகர்களும் முன் செல்ல பின்னால் வானரப்படை கடல்போலச் சென்றது.

அவர்கள் வடக்கு வாசலில் இருக்கும் இராவணனைத் தாக்கச் சென்றார்கள். அங்கு ராட்சஸப் படையும் போருக்குத் தயாராக நின்றது.







# வீட்டு நிர்வாகி

வெகுகாலத்திற்குமுன் வள்ளியப்பர் என்பவர் தம் மனைவி உலகம்மையுடன் தம் பெரிய குடும்பத்தோடு வாழ்ந்து வந்தார். அவரது நான்கு மகன்களும் நான்கு மருமகள்களும் ஒரே குடும்பமாய் ஒரே வீட்டில் வசித்து வந்தார்கள்.

வீட்டு நிர்வாகத்தை ஏற்று நடத்தி வந்த உலகம்மை ஒருநாள் வள்ளியப்பரிடம் "எனக்கோ வயதாகிவிட்டது. வீட்டு நிர்வாகத்தை என் நான்கு மருமகள்களில் ஒருத்தியிடம் ஒப்படைக்க நினைக்கிறேன். யாரிடம் ஒப்படைப்பது?" என்று கேட்டாள். வள்ளியப்பரும் "கொஞ்சம் பொறு அதற்குத் தகுந்தவள் யார் எனப் பார்க்கிறேன்" என்றார்.

இதன் பிறகு அவர் தம் மருமகள்களான பார்வதி, கௌரி, சங்கரி, உமா ஆகிய நால்வரையும் அழைத்தார். ஒவ்வொருத்தியிடமும் அவர் ஆறு நெல்மணிகளைக் கொடுத்து "இவற்றை நன்கு பாதுகாத்து நான் கேட்கும் போது திருப்பிக் கொடுக்க வேண்டும்" என்றார். அவர்களும் அவர் கொடுத்த நெல்லை வாங்கிக் கொண்டார்கள்.

பார்வதியோ "இந்த ஆறு நெல்லையா பத்திரமாக வைத்திருப்பது? நம் வீட்டில்தான் குதிரில் எப்போதும் நெல் இருக்கிறதே. மாமனார் கேட்கும் போது அதிலிருந்து ஆறு நெல் மணிகளை எடுத்துக் கொடுத்தால் போயிற்று" என்று நினைத்து அந்த நெல்லைக் குப்பை மேட்டில் விட்டெறிந்தாள்.

கௌரி அந்த நெல்லைக் கையால் நசுக்கி உமியை ஊதிவிட்டு அதில் கிடைத்த அரிசியை வாயில் போட்டுக் கொண்டாள். அவளும் மாமனார் கேட்கும்போது ஆறு நெல்மணிகளைக் குதிரிலிருந்து

—எஸ். வெங்கடராமன்—



எடுத்துக் கொடுத்துவிடலாம் என நினைத்தாள். சங்கரியோ மாமனார் கொடுத்த நெல்லை பொட்டலம் கட்டித் தன் பெட்டிக்குள் அடியே போட்டு வைத்தாள்.

உமாவோ "மாமனார் இதை எப்போது கேட்பாரோ தெரியாது. நெல் இருந்தால் அரிசியாக்கி உபயோகிப்பது ஒன்று. மற்றது அதை விதையாகப் பயன்படுத்துவது. எனவே மாமனார் கொடுத்த நெல்லை பாதுகாப்பது என்றால் அதை வயலில் விதைத்துப் பயிர் செய்வதே. அதை என் பிறந்த வீட்டிற்கு அனுப்பிப் பயிர் செய்யச் சொல்கிறேன்" என்று நினைத்துத் தன் ஊருக்கு அனுப்பினாள்.

உமாவின் தந்தையும் அந்த நெல்மணிகளைத் தம் வயலில் ஒரு ஓரமாகப் போட்டார். அந்த ஆண்டில் அது விளைந்து படி நெல்லாயிற்று. உமா அதுபற்றிக் கேட்காமல் போகவே மறு ஆண்டில் அந்தப் படி நெல்லை விதைத்து முடிவில் அறுவடை செய்ய அது ஒரு மூட்டை நெல்லாகியது. இப்படியே ஐந்து வருடங்கள் கழிய அறுபது மூட்டை நெல் சேர்ந்து விட்டது.

ஐந்து ஆண்டுகள் பொறுத்துப் பார்த்த உலகம்மை வள்ளியப்பரிடம் "இந்தக் குடும்ப நிர்வாகம் இனியும் என்னால் செய்ய முடியாது. இன்றே யாரிடமாவது ஒப்படைக்க வேண்டும். சொல்லுங்கள். யாரிடம் ஒப்படைப்பது?" என்று கேட்டாள்.

வள்ளிப்பரும் தன் மருமகள்களை அழைத்து "நான் கொடுத்த நெல் மணிகளைக் கொண்டு வாருங்கள்" என்றார். பார்வதியும் கௌரியும் அப்போதே அறுவடையாகிக் குதிரில் போடப்பட்ட புது நெல்லிலிருந்து ஆறு மணிகளை எடுத்து வந்து கொடுத்தார்கள். வள்ளியப்பர் "இது புது நெல். நான் கொடுத்தது அல்ல" என்றார். சங்கரி தான் பெட்டியில் வைத்திருந்த நெல் பொட்டலத்தை எடுத்து வந்து கொடுத்தாள். வள்ளியப்பர் அதை வாங்கிப் பார்த்துவிட்டு "மக்கிப் போயிற்றே. நீ

பத்திரமாக வைத்திருக்கவில்லையே'' என்றார்.

உமா எதுவும் பேசாது நிற்கவே வள்ளியப்பர் ''உன் நெல் என்ன ஆயிற்று?'' என்று கேட்டார். உமாவும் மறுநாள் அதைத் திருப்பித் தருவதாக கூறினாள். மறுநாள் உமாவின் தந்தை அனுப்பிய அறுபது மூட்டை நெல் வண்டிகளில் வந்து வள்ளியப்பரின் வீட்டு வாசலில் நின்றது. உமா தன் மாமனாரிடம் ''இவை நீங்கள் கொடுத்த நெல்'' என்றாள்.

வள்ளியப்பரும் ஒரு மூட்டையைப் பிரித்துப் பார்த்துவிட்டு ''ஆம் இது நான் கொடுத்த நெல் தான். நான் எதிர்பார்த்தபடி நீ நான் கொடுத்த நெல்லை பத்திரப் படுத்தினாய்'' என்று பாராட்டினார். அது கண்டு எல்லோரும் ஆச்சரியப்பட்டு நின்றனர்.

அப்போது வள்ளியப்பர் ''உலகம்மை! வீட்டு நிர்வாகப் பொறுப்பை உமாவிடம் ஒப்படை. அவள் நன்கு நிர்வகிப்பாள். நம் கடை கணக்கு வழக்குகளை சங்கரி கவனிப்பாள். ஏனென்றால் எதையும் அவள் பூட்டி வைப்பவள். கௌரி நான் கொடுத்த நெல்லை நசுக்கி உமியைப் போக்கி அரிசியை எடுத்து வாயில் போட்டுக் கொண்டவள் அவள் வீட்டுச் சமையலை கவனிக்கட்டும். பார்வதி பொருளைத் தூக்கிக் குப்பை மேட்டில் போட்டதால் அவள் வீட்டை சுத்தமாக வைத்திருக்கும் பொறுப்பை ஏற்கட்டும்'' என்றார்.

உலகம்மையும் ''பேஷ்! சரியான ஏற்பாடுதான். ஆறு நெல்மணிகளை மருமகள்களிடம் கொடுத்து அவரவர் இயல்பு என்ன என்று கண்டீர்கள். இப்போது என் நிர்வாகப் பொறுப்பு என்னை விட்டு உமாவிடம் போகிறது. இனி எனக்கு எந்தக் கவலையும் இல்லை'' என்று மகிழ்ச்சி ததும்பக் கூறினாள்.





# நண்பர்கள் அறுவை!

ஜமீன்தாரர் சொக்கநாதருக்குப் பல நண்பர்கள் இருந்தார்கள். அவர்கள் எல்லோரும் நேரம்காலம் என்று பாராமல் எப்போதும் ஜமீன்தாரரைச் சுற்றி உட்கார்ந்துகொண்டு உபயோகமில்லாத விஷயங்களைக் கூறி அறுத்துக் கொண்டே இருப்பார்கள். அந்த அறுவையை அவர் பொறுத்துக் கொண்டாலும் தம் நண்பர்களின் மனம் நோகாமல் அவர்களிடமிருந்து எப்படி விடுபடுவது என்று மிகவும் யோசிக்கலானார்.

அவர் தம் திவானான பட்டாபிராமனிடம் அதற்கு வழி கேட்கவே திவானும் அதற்குத் தாம் வழி செய்வதாகக் கூறி ஜமீன்தாரரிடம் இரகசியமாக ஏதோ சொன்னார். மறுநாள் ஜமீன்தாரர் தம் நண்பர்கள் புடைசூழ உட்கார்ந்திருக்கையில் அவரது மாளிகையை நோக்கி ஒரு கனவான் வருவதை எல்லோரும் பார்த்தார்கள்.

ஜமீன்தாரர் உடனே எழுந்து தம் மாளிகை வாசலுக்குப் போய் அந்த கனவானை வரவேற்றுக் கை குலுக்கி தோள்மேல் கைபோட்டு உள்ளே அழைத்து வந்தார். அந்த கனவானை ஒரு ஆசனத்தில் அமர்த்தினார். இதைக் கண்ட ஜமீன்தாரரின் நண்பர்கள் ஆச்சரியப்பட்டார்கள். அவர்கள் அந்த கனவானை அதற்கு முன் பார்த்ததும் இல்லை.

வந்த கனவான் ஜமீன்தாரரிடம் இரண்டே நிமிடங்கள் பேசிவிட்டு போய் வருவதாகக் கூறி எழுந்தார். ஜமீன்தாரரும் எழுந்து அவரை வழி அனுப்ப அவரோடு சென்றார்.

அவர்கள் போனதும் அந்த நண்பர்கள் "யார் இந்தப் பேர்வழி? ஜமீன்தாரர் இவ்வளவு மரியாதை

—எஸ். சோபினி—

காட்டுகிறாரே! நம்மில் ஒருவருக்குக் கூட இப்படி மரியாதை கொடுத்தது இல்லையே" என உரக்கப் பேசிக் கொண்டார்கள்.

அப்போது திவான் பட்டாபி ராமனும் "உங்களைப் போல நானும்தான் ஆச்சரியப்படுகிறேன். வந்தவர் ஜமீன்தாரரின் உயிருக்கு உயிரான நண்பர் அழகப்பராக இருக்கலாம். அவரை நானோ மற்றும் இவ்வூரில் வேறு யாருமோ பார்த்திருக்க முடியாது. ஆனால் ஜமீன்தாரர் தமது நண்பரைப் பற்றிப் பலமுறை என்னிடம் கூறி இருக்கிறார்" என்றார்.

அங்கிருந்த நண்பர்களும் "அழகப்பரா? இந்தப் பெயரை நாங்கள் கேட்டதே இல்லையே. ஆமாம். இந்த அழகப்பரைப் பற்றிச் சிறப்பாக ஜமீன்தாரர் என்னதான் உங்களிடம் சொல்லி இருக்கிறார்?" என்று கேட்டார்கள். திவானும் "ஆம். அழகப்பர் கொண்டுள்ள இந்தக் கருத்தைதான் ஜமீன்தாரர் அடிக்கடி என்னிடம் கூறுவார். ஒருவர் தம் நண்பரின் வீட்டிற்குச் சென்றால் அங்கு அவர் எவ்வளவு நேரம் இருந்தார் என்பதைவிட எவ்வளவு விரைவில் அங்கிருந்து சென்றார் என்பதே முக்கியம். இதுதான் அழகப்பர் கூறுவதும் செய்வதும். இதனால்தான் அழகப்பரைத் தமக்கு மிகவும் பிடித்திருப்பதாகவும் ஜமீன்தாரர் அடிக்கடி கூறுவார்" என்றார்.

அந்த நண்பர்களுக்கு அப்போதுதான் ஜமீன்தாரர் அழகப்பருக்கு ஏன் அவ்வளவு மரியாதை காட்டி



னார் என்பது புரிந்தது. அவர்கள் எல்லோரும் உடனே எழுந்து அங்கி ருந்து வெளியே கிளம்பினார்கள்.

அழகப்பரை வழி அனுப்பி விட்டுத் திரும்பிய ஜமீன்தாரர் தம் நண்பர்கள் எல்லோரும் வந்து கொண்டிருப்பது கண்டு சிரித்தவ ராய் "என்ன விஷயம்? எல்லோ ரும் வீட்டிற்கு கிளம்பி விட்டீர் களா?" என்று கேட்டார்.

அந்த நண்பர்களுக்குச் சட்டென பதில் சொல்ல எதுவும் தோன்ற வில்லை. பிறகு சமாளித்துக் கொண்டு அவர்கள் "ஒன்றுமில்லை. மேலப்பண்ணை மாதரவராயர் இன்று பட்டணம் போவதாகக் கூறி இருந்தார். அவர் கிளம்பிப் போகுமுன் ஒரு முக்கியமான செய் தியை அவரிடம் கூறவேண்டும். இதுபற்றிய நினைவு எங்களுக்கு இப்போதுதான் வந்தது. அதை மறந்துவிட்டு இங்கே வெகு நேரம் இருந்து விட்டோம். போய் வரு கிறோம்" என்று கூறிவிட்டுச் சென்றார்கள்.

ஜமீன்தாரரும் சிரித்துக்கொண்டே தம் மாளிகைக்குள் போய் திவா னிடம் "சரியான வழி கண்டு பிடித்தீர்கள். பணம், பதவி என்று ஒருவனுக்கு இருந்தால் அவனைச் சுற்றி எப்போதும் பத்துப் பேர்கள் இருப்பார்கள். அது எதற்கு? அவ னால் தாம் ஆதாயம் அடைய முடி யும் என்பதற்காகவே. நம் விரோ தியை நாம் எதிர்த்துப் போராடி சமாளித்து விடலாம். ஆனால் நண்பர்கள் என்று கூறிக் கொண்டு இப்படி நம்மைச் சுற்றிச் சுற்றி வருபவர்களைச் சமாளிப்பதுதான் கடினம். நீங்கள் செய்த ஏற்பாடு பயனுள்ளதாயிற்று. நேரம்,காலம் என்று பாராமல் இங்கேயே சுற்றி வீண் பேச்சுப் பேசி வந்த இந்த நண்பர்களிடமிருந்து விடுபட்டு விட்டேன். அழகப்பர் போல வந்த ஆசாமி அசல் கனவானாகவே மிக நன்றாக நடித்தான். அவனுக்கு நல்ல வெகுமதி அளியுங்கள்" என்றார்.





# வேம்பின் சிறப்பு!

வெகுகாலத்திற்கு முன் கேரளத்தின் ஒரு பகுதியை ஆண்ட ஜாமரின் நிறையப் பணம் வேண்டும் என்பதற்காக நாடெங்கிலும் புளிய மரங்களை நடவேண்டும் என்றும் புளியந்தோப்புகளை அதிகரிக்க வேண்டும் என்றும் தன் மந்திரியிடம் கூறினான்.

அந்நாட்டில் மாதவ நம்பியார் என்ற புகழ்பெற்ற ஆயுர்வேத வைத்தியர் இருந்தார். அவருக்கு இணை டில்லி சக்கரவர்த்தியிடம் உள்ள அராபிய ஹக்கீம்தான் என்று மக்களிடம் நம்பியார் புகழ் பெற்றிருந்தார். ஹக்கீம் இயற்கை வைத்தியத்தில் கை தேர்ந்தவர்.

ஜாமரின் தன் மந்திரியிடம் கூறியதை கேள்விப்பட்ட நம்பியார் அவனை பேட்டி கண்டு "புளிய மரம் உடல் நலனை கெடுக்கும். அதற்கு பதிலாக நாடெங்கிலும் வேப்ப மரங்களை நட்டால் நல்லது. அது எல்லா நோய்களையும் போக்கும்" என்றார்.

ஜாமரினோ "புளிய மரத்தால் பல பயன்கள் உண்டு. வேப்ப மரத்தால் என்ன பிரயோசனம்? எல்லாம் ஒரே கசப்பு தான்" என்றான்.

அதைக் கேட்ட நம்பியார் ஜாமரினிடம் பேசிப் பயனில்லை எனப் புரிந்து கொண்டு பதில் எதுவும் கூறாமல் விடைபெற்றுக் கொண்டு நேரே மந்திரியின் வீட்டிற்கு சென்றார். மந்திரியும் அவரை மரியாதையுடன் வரவேற்றார். நம்பியார் அவரது முகத்தைப் பார்த்தவாறே "அடடா! என்ன இது!!" என்று ஆச்சரியத்தடன் கூறினார்.

மந்திரியும் "என்ன விஷயம்?" என்று ஆவலுடன் கேட்கவே நம்

—மலையாள மொழிப் பழங்கதை—



பியார் அவரது கையைப் பிடித்து நாடியைப் பரீட்சித்தவாறே "எங்கே நாக்கை நீட்டுங்கள்" என்றார். மந்திரியும் வாயைத் திறந்து நாக்கை நீட்டவே, நம்பியாரும் "நான் நினைத்தது சரி தான். இப்போது தான் இந்த வியாதி ஆரம்ப நிலையில் உள்ளது. இது இன்னும் ஆறு மாதத்தில் பயங்கரமாக மாறிவிடும். இதற்கு இப்போதே சிகிச்சை ஆரம்பிப்பது நல்லது" என்றார்.

மந்திரியும் பயந்து போய் "அப்படியானால் இப்போதே எனக்கு மருந்து கொடுங்கள்" என்றார். நம்பியாரும் "இந்த நோய்க்கு என்ன சிகிச்சை அளிப்பது என்று எனக்குத் தெரியாது. ஆனால் இதைப் போக்கக் கூடியவர் டில்லி சக்கரவர்த்தியிடம் உள்ள ஹக்கீம் தான். நீங்கள் விரைவில் போய் அவரைக் காண்பதே நல்லது" என்றார்.

மந்திரியும் ஜாமரினிடம் சொல்லி ஒரு வருட காலத்திற்கு விடுப்பு பெற்றுக் கொண்டு டில்லிக்கு கிளப்பினார். அவரை நம்பியார் கண்டு "நீங்கள் டில்லிக்குப் போகும் போது எந்த இடத்தில் தங்கினாலும் ஒரு புளியமரத்தின் கீழேயே தங்குங்கள். புளியமரத்தின் கீழேயே இரவில் படுத்துத் தூங்குங்கள். புளியங்குச்சியாலே பல் துலக்குங்கள். உங்கள் சமையலுக்கும் புளியம் விறகையே அடுப்பில் வைத்து எரிக்கச் சொல்லுங்கள்" என்றார்.

மந்திரியும் நம்பியார் கூறிய படியே நடந்து தம் ஆட்களோடு டில்லிக்குக் கிளம்பினார். அவர் டில்லியை அடைந்தபோது அவரது உடல்நலம் குன்றியது. உடல் மெலிந்தது. சோர்வு மிக அதிகமாயிற்று.

மந்திரி டில்லிச் சக்கரவர்த்தியின் ஹக்கீமை மிக எளிதில் கண்டார். அவரிடம் நம்பியார் தனக்கு ஏதோ பயங்கர நோய் வரப் போவதைக் கூறி அனுப்பியதாகவும் வழியில் எப்படி முன்னெச்சரிக்கையுடன் புளிய மரத்தடியே தங்கிச் செல்ல வேண்டும் என்று கூறியதையும் சொன்னார். ஹக்கீமிற்கு நம்பியாரின் நோக்கம் என்ன என்று புரிந்து விட்டது.

ஹக்கீமும் "உங்கள் வியாதி பயங்கரமானதே. ஆனால் அதன் சிகிச்சை மிக எளிது. நீங்கள் இப் போதே திரும்பி உங்கள் ஊருக் குச் செல்லுங்கள். ஆனால் போகும் வழியில் வேப்ப மரத்தின் கீழ் தங்குங்கள். வேப்ப மரத்தின் கீழ் படுத்துத் தூங்குங்கள். பல் துலக்க வேப்பம் குச்சியையே உபயோகி யுங்கள். சமையலுக்கும் வேப்ப விறகையே உபயோகியுங்கள். நீங் கள் ஊர் போய்ச் சேர்வதற்குள் உங்கள் நோய் போய்விடும். உங் கள் உடல் நல்ல பலம் பெறும். உங்கள் சோர்வும் போய் உற்சாகத் துடன் நீங்கள் இருப்பீர்கள். வைத்திய சிரோன்மணி நம்பியா ரிடம் என் பணிவான வணக்கங் களையும் தெரிவியுங்கள்" என்று கூறி அனுப்பி வைத்தார்.

வேறு எந்த வைத்தியராவது இப்படிச் சொல்லி இருந்தால் அதை மந்திரி நம்பி இருக்கவே மாட்டார். ஆனால் டில்லி சக்கர வர்த்தியின் ஹக்கீம் கூறி விட்ட தால் அதில் முழு நம்பிக்கை கொண்டு தன் ஆட்களுடன் டில்லி யிலிருந்து கிளம்பித் தம் ஊர் திரும்பலானார்.

ஹக்கீம் கூறியபடியே மந்திரி வழி நெடுக வேப்ப மரங்களின் கீழ் தங்கியும், படுத்துத் தூங்கியும் வேப்பங் குச்சிகளாலேயே பல் துலக்கியும் வேப்பம் விறகுகளைக் கொண்டே சமையல் செய்யச் சொல்லியும் சென்றார். இதனால் அவரது உடல் நலம் மேம்பட்டது. உடலில் வலு ஏற்பட்டதோடு புதுமை



மெருகும் கூடியது. சோர்வு போய் உற்சாகத்துடன் காணப்பட்டார்.

மந்திரி ஊரை அடைந்ததுமே நம்பியார் அவரைக் காணச் சென்றார். மந்திரியும் அவரை உற்சாகத்துடன் வரவேற்று டில்லியில் ஹக்கீம் கூறியதையும் அதன்படியே தான் நடந்து கொண்டதையும் சொன்னார். அப்போது நம்பியார் "இப்போது நாம் இருவரும் சேர்ந்து ஜாமரினைப் பார்க்கப் போகலாம்" என்றார்.

மந்திரியும் நம்பியாரை அழைத்துக் கொண்டு ஜாமரினிடம் சென்றார். மந்திரி ஹக்கீம் கூறிய சிகிச்சையைக் கூறவே அது கேட்டு ஜாமரின் ஆச்சரியப்பட்டான். அப்போது நம்பியார் "இதில் நான் செய்த பெரும் தவறை நீங்கள் இருவரும் மன்னிக்க வேண்டும். உண்மையில் மந்திரியார் இங்கிருந்து போகும்போது எவ்வித நோயையும் கொள்ளவில்லை. ஆனால் அவர் வழி நெடுகப் புளியமரத்தடியே தங்கி அதன் குச்சி விறகு முதலியவற்றை உபயோகித்ததால் அவரது உடல் தளர்ந்து சோர்வும் ஏற்பட்டது. அந்தத் தளர்ச்சியும் சோர்வும் போய் உடல் பொலிவுடன் விளங்கவே ஹக்கீம் மந்திரியை வேப்பமரத்தின் கீழ் தங்கியும் படுத்து உறங்கியும் போகச் சொன்னார். வேப்பங் காற்று பட்டதும் அவரது உடலின் தளர்ச்சியும் சோர்வும் போய் உடலில் புதுப் பொலிவும் ஏற்பட்டது. டில்லி ஹக்கீமே உடல் நலனைக் கெடுப்பது புளிய மரம் என்றும் உடல் நலனைக் கூட்டுவது வேப்ப மரம் என்றும் சொல்லாமல் உணர்த்தி விட்டார். இனியாகிலும் நம் நாட்டில் எங்கும் புளிய மரம் வளர்ப்பதைக் கைவிட்டு வேப்ப மரங்களை வளர்க்கலாமே" என்று ஜாமரினைப் பார்த்துக் கூறினார்.

ஜாமரினும் நாடெங்கிலும் வேப்ப மரங்களை வளர்க்கும்படி உத்திரவு போட்டான்.



## மனிதமுகப் பாம்பு!

கும்பகோணத்திற்கு அருகில் உள்ள வலங்கைமான் என்ற இடத்தில் ஆறு அடி நீளமுள்ள நல்ல பாம்பு பிடிக்கப்பட்டது. மூன்று மாதங்களுக்கு முன் பிடிக்கப்பட்ட இப்பாம்பின் தலை மனிதனின் முகத்திலுள்ள கண்கள், மூக்கு, புருவங்கள், வாய் போன்றவைகளைக் கொண்டிருந்தது. அதனால் மக்கள் ஆச்சரியப்பட்டனர்.





## குள்ள நீர் யானை

ஆப்பிரிக்காவில் நைஜீரியா நாட்டில் மிகக் குள்ளமான நீர் யானைகள் காடுகளில் உள்ளன. இதன் உயரம் 75 செ.மீ. இது சாதாரண நீர் யானையின் உயரமான 150 செ.மீட்டரில் பாதிதான். இதன் நீளம் 2.5 மீட்டர். நீர் யானைகள் புல்வெளிகளில் திரியும். ஆனால் இந்தக் குள்ள நீர் யானை சிறு குட்டைகளில் இருக்கும். நீர் யானை இரவில் புல்வெளியில் இருந்து பகலில் நீர் குடிக்கக் குளம் குட்டைகளுக்கும் செல்லும். ஆனால் குள்ள நீர் யானை இதற்கு நேர்மாறாகச் செய்கிறது. இது புல், கிழங்கு, வேர், பழங்கள் ஆகியவற்றை உண்கின்றது.

## அதிசயப் பறவை!

பஸ்டர்ட் எனப்படும் அபூர்வ அதிசயப் பறவை பல ஆண்டுகளுக்குப் பின் அண்மையில் ஆந்திரப் பிரதேசத்தில் கர்னூல் மாவட்டத்துக் காடு ஒன்றில் தென்பட்டது. இதன் உயரம் சுமார் ஒரு மீட்டர். இது வெட்டுக்கிளி, பல்லி, மரவட்டை, மண் புழு போன்றவற்றைச் சாப்பிடும். அபூர்வப் பறவை வகையானதால் இவற்றைப் பராமரிக்க ஒரு திட்டம் வகுக்கப்பட்டு தற்போது நாற்பது பறவைகள் ராயல சீமைப் பகுதிகளில் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. நம் நாட்டில் ராஜஸ்தானம், குஜராத், மகாராஷ்டிரம், மத்தியப் பிரதேசம் ஆகிய மாநிலங்களிலும் இவை உள்ளன.



# பொம்மை

## திரையுலகின் நட்சத்திரப் பத்திரிகை

### மாதம் ஒருமுறை மலரும்
### சிறப்புமிக்க வண்ண இதழ்

நட்சத்திர பேட்டிகள்,
சிறந்த சினிமா செய்திகள்,
வண்ணப் படங்கள்,
ரசிகர்களின்
விருப்பம் போல
என்றும் புதுமையுடன்
மலரும்

பொம்மை

தனிச் சிறப்புடன் விளங்குகிறது.

பெரிய அளவில்,
புதிய பகுதிகளுடன்,
ஒவ்வொரு மாதமும்
வெளிவருகிறது

விலை ரூ. 6/-
வருட சந்தா: ரூ. 72-00

இது ஒரு டால்டன் வெளியீடு

## போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ. 50

**இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1992 ஜூன் மாத இதழில் வெளியிடப்படும்**



M. Natarajan



M. Natarajan

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ ஏப்ரல் 10ந் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும். ★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்பு களுக்கு ரூ. 50/—பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க் கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை-600 026

---

### பிப்ரவரி மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ : **பெரிய வாகனத்தில் சிறியவர் சிலிர்ப்பு**

இரண்டாவது போட்டோ : **சிறிய வாகனத்தில் பெரியவர் சிரிப்பு**

பரிசு பெற்றவர் : **பி. ஹரிராம்,** பாளையங் கோட்டை

பரிசுத் தொகை ரூ. 50/-ம் இம்மாதக் கடைசிக்குள் அனுப்பி வைக்கப்படும்.


## அம்புலிமாமா

இந்தியாவில் ஆண்டு சந்தா ரூ. 48–00

சந்தா அனுப்பவேண்டிய முகவரி :

டால்டன் ஏஜென்சீஸ், சந்தமாமா பில்டிங்ஸ், வடபழனி, சென்னை-600026

Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.


---

# அம்புலிமாமா

மாதாமாதம் கதைகள் வாயிலாக இந்திய நாட்டின் கடந்த கால, தற்கால மேன்மையை விவரிக்கிறது.

வண்ணப்படங்கள் அறுபத்து நான்கு பக்கங்களிலும் மிளிர, புராணங்கள், பழங்கதைகள், வரலாற்று நிகழ்ச்சிகள், பெரியோர்களின் வாழ்க்கை ஆகியவற்றின் அடிப்படையில் அற்புதக் கதைகளையும் மேலும் சீரிய கற்பனைக் கதைகளையும் இன்றைய நிலைக்கு ஏற்ப அளிக்கிறது.

11 மொழிகளிலும் சமஸ்கிருதத்திலும் கூட வெளிவருகிறது.

சந்தா விவரங்களை அறிய முகவரி:

**டால்டன் ஏஜன்சீஸ், 188 என். எஸ். கே. சாலை, சென்னை-600 026**

வெகு தொலைவிலுள்ள உங்கள் உற்ருர், உறவினர்களுக்கு நீங்கள்
அளிக்க நினைக்க வேண்டிய அரிய பரிசு

# அம்புலிமாமா



அவர் விரும்பும் மொழியில் இந்தப் பத்திரிகையை நீங்கள்
அளியுங்கள்

அஸ்ஸாமி, வங்காளி, ஆங்கிலம், குஜராத்தி, ஹிந்தி, கன்னடம், மலையாளம்,
மராட்டி, ஒரியா, சமஸ்கிருதம், தமிழ், அல்லது தெலுங்கு

தாய் நாட்டில் இருப்பது போலவே இது அவரை வெளி நாட்டிலும்
உணரச் செய்யும்

சந்தாத் தொகை (ஆண்டிற்கு)

ஆஸ்திரேலியா, ஜப்பான், மலேசியா, ஸ்ரீலங்கா ஆகிய நாடுகளுக்கு

கடல் தபால் வாயிலாக ரூ. 105.00 விமானத்தபால் வாயிலாக ரூ. 216.00

பிரான்ஸ் சிங்கப்பூர், யு.கே, யு.எஸ்.ஏ, மேற்கு ஜெர்மனி, மற்றுமுள்ள
நாடுகளுக்கு

கடல் தபால் வாயிலாக ரூ. 111.00 விமானத்தபால் வாயிலாக ரூ. 216.00

பணத்தை நீங்கள் டிராப்டாகவோ மணியார்டராகவோ சநதமாமாமா பப்ளிகேஷன்ஸ்
என எழுதி

சர்குலேஷன் மானேஜர், சந்தமாமா பப்ளிகேஷன்ஸ், சந்தமாமா பில்டிங்க்ஸ்,
வடபழனி, சென்னை-600 026. என்ற முகவரிக்கு அனுப்பவும்